# உங்கள் மகளின் எதிர்கால வாழ்க்கைக்கு பொறுப்பு நீங்கள்

அவளது வருங்கால. முற்றிலும் சுகமான வாழ்க்கையை நிச்சயப்படுத்துவதற்கு இன்றே பணம் சேமிக்கத் தொடங்குங்கள்.

சேமிக்கவும மற்றும கரண்ட்.
ஸேவிங்ஸ். ஃபிக்ஸெட். ரெக்
கரிங் டிபாஸிட்டுகள் ஆகிய
கணக்கு தொடங்குவதற்கான
எல்லாவித செளகரியங்களை
யும் வழங்குகின்றோம்.




தலைமை அலுவலகம் : கல்கத்தா

UCO-1/77

ருத்தியிலே விளைந்திடும் கற்பனைகள் அற்புதமோ அதி அற்புதம்

# மோஸ்தர்கள்



நாகரீகமான பிரிண்டுகள் ... மதிமயக்கும் நெசவுநயம்...
விரும்பித் தேர்ந்தெடுக்க விதவிதம்.
இயற்கைச் சிறப்பிலே இணையற்றது பருத்தி.



**ஸென்சுரி** - 100% பருத்தித் துணிகள்

தி ஸென்சுரி ஸ்பின். அண்டு. மான்யு. கம். லிமிடெட், பம்பாய்-400 025

ADROIT/CM/534 P/TAM

புதிது—:பாஸ்:போமின் தயாரிப்பாளர்கள் அளிக்கும்

# :பாஸ்:போமின் அயன்

## ...ஏனெனில், பெண்களுக்கு அயன் அதிகம் தேவை

பெண்களுக்கு அயன் அதிகம் தேவை; ஏனெனில் மாதந்தோறும் அவர்களுக்கு அயன் இழப்பு ஏற்படுகிறது. உயிர்ச்சத்தான அயன் இட்டு நிரப்பப்பட வேண்டும்.

பெண் கருவுற்றிருக்கும் போதும், தன் குழந்தைக்குப் பாலூட்டும் காலத்திலும் அவளுக்கு அதிக அயன் சத்து தேவைப்படுகிறது. ஏனெனில் அக்காலங்களில் தன் குழந்தைக்கும் சேர்த்துப் போதுமான அயனைப் பெற வேண்டியிருக்கிறது.

இழந்த அயன் சத்தை இட்டு நிரப்பவும், உடலில் அயன் சத்தைச் சமநிலையில் பெற்றிருக்கவும் :பாஸ்:போமின் அயன் அருந்துங்கள்; :பாஸ்:போமின் அயன் ஒவ்வொரு பெண்ணிற்கும் தேவையான டானிக்.

:பாஸ்:போமின் அயன் சத்து நிறைந்த சிவப்பு ரத்த செல்களை உருவாக்க உதவுகிறது—உங்களை இளமையோடு இருக்கச் செய்கிறது.

:பாஸ்:போமின் அயன் வைட்டமின்களையும் தாதுப் பொருட்களையும் கூட உங்களுக்குத் தருகிறது—உங்களைச் சுறுசுறுப்புடனும் உற்சாகத்துடனும் வைத்திருக்கிறது.

இன்று முதல் :பாஸ்:போமின் அயனை அருந்துங்கள். ஒவ்வொரு நாளும் அருந்துங்கள்.

எல்லா கெமிஸ்டுகளிடமும் 240 மி.லி., 480 மி.லி. ஆகிய 2 சைஸ்களில் கிடைக்கிறது.






**புதிது! :பாஸ்:போமின் அயன்— பெண்களுக்கென்று விசேஷ முறையில் உருவாக்கப்பட்டுள்ள முதல் டானிக்**

SQUIBB SARABHAI CHEMICALS



Shilpi-HPMA-7A/73 Tam

மூன்று மாதங்களுக்கு மேலான குழந்தைகளுக்கு
அமுல் தரும் ஒரு புதிய முக்கிய உணவு

# பாலஅமுல்

குழந்தையின் முதல் தானிய துணை உணவு
எளிதில் சீரணிக்கக் கூடிய புரதச் சத்து நிரம்பியது.

## மூளையும் உடலும் முழுமையாக வளர

உங்கள் குழந்தை, பிறந்த மூன்றாவது மாதத்திலிருந்து, பால் குடிப்பதுடன், தானிய துணை உணவுகளையும் உட்கொள்ளுகிறது அல்லவா? சாதம், ருஜி, வாழைப் பழம் போன்ற வழக்கமான உணவுகள் உங்கள் குழந்தைக்குப் போதுமான புரதச் சத்துக்கள் வழங்குவதில்லை; ஏனெனில் அவற்றில் மாவுப்பொருள் அதிகமாக உள்ளது. முதல் இரண்டு ஆண்டுகளில், போதிய புரதச் சத்து தந்தால்தான் உங்கள் குழந்தையின் மூளையும் உடலும் சீராக வளரும். பாலஅமுல் ஒரு சரிவிகித சத்துணவு. அதில் தரமுயர்ந்த பால் மற்றும் தாவர புரதச் சத்துக்கள் நிறைய உள்ளன. வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் மிகுந்துள்ளன. இவற்றால் உங்கள் குழந்தையின் மூளையும் உடலும் முழுமையாக வளர உறுதி கிடைக்கிறது.

வேலூரிலுள்ள கிறிஸ்டியன் மெடிகல் காலேஜ் அண்டு ஹாஸ்பிடலின் டாக்டர்கள் குழந்தைகளுக்குப் பாலஅமுல் புகட்டிப் பரிசோதனைகள் செய்து சிறந்த பலன் கண்டிருக்கிறார்கள்.









கைரா டிஸ்ட்ரிக்ட் கோ-ஆப்பரேடிவ்
மில்க் ப்ரொட்யூஸர்ஸ் யூனியன், ஆனந்த், குஜராத்.

# ஹிந்தாலியம்

**சமையலறை மற்றும் மேஜைப் பாத்திரங்கள்**
**இல்லத்தரசிக்கு இனிய வரப்பிரசாதம்**



ஹிந்தாலியம் உங்கள் விருந்தினர்களுக்கு பளிச்சென்று, சுடர்விடும் வரவேற்பளிக்கிறது; அந்நியோன்னியமான குடும்பத்திற்குகந்த இனிய சூழ்நிலையை உருவாக்குகிறது. அதை விசேஷ சந்தர்ப்பங்களிலும் உபயோகிக்கலாம், தினசரி உபயோகத்திற்கும் வைத்துக் கொள்ளலாம்; அது எப்பொழுதும் சிறப்பாகத் தோற்றமளிக்கிறது. கேடரிங் டெக்னாலஜியில் நிபுணரான குமாரி திவ்யா படேல் எச்.எம்.சி.டி. அதிகப்படியான இந்த 5 உன்னதமான காரணங்களுக்காக ஹிந்தாலியம் பாத்திரங்களைச் சிபாரிசு செய்கிறார்.

| | |
|---|---|
| தரம் | வலுவானவை, நீடித்துழைப்பவை, அதுங்காத் தன்மையுடையவை. |
| விலை | ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களின் விலையில் மூன்றில் ஒரு பங்குதான். |
| தோற்றம் | மழமழவென, வெள்ளியைப்போல தோற்றமளிக்கின்றன. நவீன டிஸைன்களில் தயாரிக்கப்படுகின்றன. |
| சிக்கனம் | சூட்டை நன்றாகப் பரப்புகின்றன; எண்ணெ அல்லது எரிபொருள் குறைந்த அளவில்தான் தேவைப்படுகிறது. |
| உபயோகம் | கையாள வசதியானவை, சோப் மற்றும் கந்தல் துணியினால் சீக்கிரமாகவும் சுலபமாகவும் சுத்தம் செய்து விடலாம். |

**HINDALIUM®**

இவர்கள் தயாரிக்கும் விசேஷ அலுமினிய கலப்பு உலோகத்தின் ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க் ஆகும்




**ஹிந்துஸ்தான் அலுமினியம் கார்ப்பொரேஷன் லிட்,**
தபால் ஆபீஸ் ரேணுகூட்,
ஜில்லா. மிர்ஸாபூர் (உ.பி.)



**ஹிந்தாலியம்** பாத்திரங்கள் நியாயமான விலைக்கு விற்கப்படுகின்றன. அதிக விலை கொடுக்காதீர்கள். அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகளிடம் உள்ள **ஹிந்தாலியம்** பாத்திரத் தயாரிப்பாளர்களின் விலைப் பட்டியலைப் பார்த்து வாங்குங்கள்.

Sobhagya HAC-605 TAM



# காபியின் விலை நிர்ணயிக்கப்பட்டுள்ளது

## தரமான காபித் தூள்

### தற்போது கிடைக்கிறது

**நிர்ணயிக்கப்பட்ட விலைப்படி ஒரு கிலோ ரூ. 10/-**
(வரிகள் உள்பட)

காபி போர்டின் எல்லா **காபி ஹவுஸ்களிலும், இந்தியா காபி டெப்போக்களிலும்** 31-12-1973 வரையில் கிடைக்கும்

**காபியைப்பற்றி நன்கு அறிந்தவர்களால் அவ்வப்போது புதிதாக வறுத்து, பக்குவமாக அரைத்த இந்த காபி பவுடர் மூடப்பட்ட பைகளில் கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும்**

- ○ இந்தியா காபி டெப்போ, 192, மவுண்ட் ரோடு, சென்னை
- ○ இந்தியா காபி டெப்போ, 20, ராமநாதன் தெரு, தி. நகர், சென்னை
- ○ இந்தியா காபி டெப்போ, மயிலாப்பூர், சென்னை
- ○ இந்தியா காபி டெப்போ, 322/323, லிங்கி செட்டித் தெரு, சென்னை
- ○ இந்தியா காபி டெப்போ, ICF ஷாப்பிங் சென்டர், பெரம்பூர், சென்னை
- ○ இந்தியா காபி டெப்போ, 23, ஸ்ரீரங்கபாளையம் ரோடு, குமாரசாமிப்பதி, சேலம்
- ○ இந்தியா காபி டெப்போ, 16-B, மேற்கு புலிவார் ரோடு, தெப்பக்குளம், திருச்சி
- ○ இந்தியா காபி டெப்போ, 20/345, இடையர் தெரு, கோயமுத்தூர்
- ○ இந்தியா காபி டெப்போ, 75, மேற்கு ஆவணி மூலத் தெரு, மதுரை




## காபி போர்டு

நெ. 1, விதான வீதி
பெங்களூர்-1

K/CB – 121

## பொருளடக்கம்

**பிரமாதீச, புரட்டாசி 14 - செப்டம்பர் 30, 1973**



மேலட்டை:
நவராத்திரிக்கு நவநவமான கோலம்
வண்ணப்படம் : நரசிங்கம்




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

"நான் ராபின் ப்ளூவைத்தான் உபயோகித்து வருகிறேன். காரணம், அது எப்பொழுதும் வெள்ளைத் துணி-உடைகளை மிகப் பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குகின்றது"

திருமதி ரேணு பி. ஏ. (ஆங்கிலத்தில் ஆனர்ஸ்)
நவீனகால குடும்பப் பெண்



## இதனை லட்சக் கணக்கான பிற குடும்பப் பெண்களும் ஒப்புக் கொள்ளுகின்றனர்




வெள்ளைத் துணி-உடைகளை, ஸோப்பு அல்லது டிடர்ஜென்ட் கொண்டு வெளுக்கச் செய்வது மட்டும் போதாது. மிகப் பளிச்சிடும் தூயவெண்மை ஆக்குவதற்கு அவற்றை ராபின் ப்ளூவில் மூழ்கச் செய்தெடுக்க வேண்டும். ஒரு வாளி தண்ணீரில் ஒரு சிட்டிகை ராபின் ப்ளூ அற்புதமாக வேலை செய்யும்.

# ராபின் ப்ளூ

வெள்ளைத் துணி-உடைகளை மிகப் பளிச்சிடும் தூய வெண்மையாக சுத்தம் செய்கின்றது.

ARBC-36 TAM

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்





மலர் 33 :: இதழ் 9


# பிரதமரின் கவலை

நாட்டின் ஒற்றுமையைப் பாது காக்க வேண்டும் என்றும், பிரிவினை பற்றிப் பேசுவது ஒற்றுமையைக் குலைப்பதேயாகும் என்றும் பிரதமர் இந்திரா காந்தி சென்னையிலும் காரைக்குடியிலும் கவலையுடன் பேசியிருக்கிறார். பிரதமரின் கருத்தைப் பொதுவாக எல்லோருமே வரவேற்பார்கள். அவருடைய கவலையும் புரிந்து கொள்ளக்கூடியதே. ஏனெனில் பிரிவினை என்ற விஷவித்தைத் தமிழ் நாட்டிலிருந்து முற்றிலும் அகற்றிவிட முடியவில்லை. அதைப் பற்றிய கோஷங்களும், வாதங்களும், பிரசாரங்களும், வெவ்வேறு ரூபங்களில் கிளைத்துக் கொண்டுதான் இருக்கின்றன.

தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் புதுக் காங்கிரசுக்குச் செல்வாக்கு அடியோடு போய்விட்டது என்பதை உணர்ந்து, சென்ற தேர்தலில் போட்டியிடாதது புது காங்கிரசு செய்த தவறு என்பதை வருத்தத்துடனும் கவலையுடனும் பிரதமர் சொல்லியிருக்கிறார்.

அரசியலில், காங்கிரஸ் பிளவுபட்டதற்குப்பின், புது காங்கிரசில் கூட்டம் கூட்டமாக வந்து சேர்ந்தவர்கள் பெரும்பாலும் சுயநலத்தைப் பேணும் அரசியலார்கள்தாம். இவர்கள் நாட்டின் முன்னேற்றத்துக்கு உண்மையில் பாடுபடும் தீவிரமும், நடவடிக்கை வகுத்துக் கொடுக்கும் ஆற்றலும் இல்லாதவர்கள் என்பதை உயர்ந்த அரசியல் அறிவு படைத்துள்ள பிரதமர் நன்றாகவே உணர்ந்திருக்கிறார் என்று நம்பலாம்.

பொருளாதாரத் துறையிலும் நிலைமை பரவலாகச் சீரழிந்து கிடக்கிறது. இதற்குத் தக்க முறையில் பரிகாரம் தேடி நிலைமையை அபிவிருத்தியடையச் செய்யும் திறமையுள்ள சகாக்கள், புது காங்கிரசில் இல்லை என்பதும் பிரதமருக்குத் தெரிந்துதான் இருக்க வேண்டும்.

இவையெல்லாம் உணர்ந்ததால் ஏற்பட்டதுதான் பிரதமரின் கவலை என்று கருதலாம். புதுதில்லியில் கூடிய இந்திரா காங்கிரசின் செயற்குழு, நாட்டில் அரசியல், பொருளாதாரம் எல்லாமே சீரான நிலையில்தான் இருக்கிறது என்று தீர்மானங்களை நிறைவேற்றிய பின்னரும் நாட்டின் ஒற்றுமையைக் காக்கப் பிரதமர் விடுத்துள்ள வேண்டுகோளைப் பார்த்தால், நாட்டின் உண்மையான அரசியல், பொருளாதார சீரழிவை, பிரதமர் நன்றாகவே உணர்ந்து இருக்கிறார் என்று அனுமானிக்கலாம்.

கவலை கொள்வது ஒன்று; பரிகாரம் தேடுவது மற்றொன்று. பிரதமர் கவலை மட்டும்தான் தெரிவித்திருக்கிறாரே தவிர பரிகாரம் தேட முற்படவில்லை.

பழைய காங்கிரசிலிருந்து புதிய காங்கிரசில் சேர விரும்பும் அரசியல்வாதிகளுக்குத் தமது நேசக் கரத்தை நீட்டியிருக்கிறார் பிரதமர். திறமையுள்ள, செல்வாக்கு உள்ள, ஆழ்ந்த தேச பக்தர்களைத் தமது கட்சியில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் பிரதமரின் பரிகாரம் தேடும் முயற்சியில் ஓர் அம்சமாக இருக்குமோ என்று கருதத் தோன்றுகிறது.

பாரதநாடு சுதந்திரம் பெற்ற பின்னர் டாக்டர் அம்பேத்கார், ஜான்மத்தாய் போன்ற கட்சிச் சார்பற்ற அறிஞர்களைக் கொண்டுதான் அரசாங்கம் அமைந்தது. அதனால் நாட்டுக்கு நன்மையே உண்டாயிற்று. அம்மாதிரி அவசிய நிலை இப்போது நமது நாட்டில் ஏற்பட்டுள்ளது. நாட்டுப் பற்றும், திறமையும், செல்வாக்குமுள்ள தலைவர்களின் ஒத்துழைப்பும், செய்திறனும் இன்று நாட்டுக்கு மிகுந்த நன்மையை அளிக்கும். தேச பக்தியும் நாணயமும் உடையவர்களும் மக்களின் நம்பிக்கையைப் பெற்றவர்களுமான தலைவர்களின் திறமையை நாட்டு நன்மைக்காகப் பயன்படுத்திக் கொள்வது தான் விவேகமாகும்.

ஆகவே தற்போதுள்ள அரசியல்—பொருளாதார சீர்கேடான நிலைமைக்குப் பலன் அளிக்கக்கூடிய ஒரேபரிகாரம், புது தில்லியில் இப்போதுள்ள கட்சி அரசாங்கத்துக்குப் பதிலாகத் திறமையை மட்டுமே பிரதானமாகக் கொண்ட கட்சிச் சார்பற்ற திறமையாளர்களின் ஆட்சி அமைத்தலே ஆகும். கட்சியின் நன்மையைக் கருதாது நாட்டின் நலனையே பிரதானமாகக் கருதினால் திறமையுள்ளவர்களைக் கொண்டு அரசாங்கம் நடத்துவது தான் நல்லது என்பது தெளிவாகப் புரியும்.

# அறிக்கை என்னவாயிற்று?

தமிழ் நாட்டிலுள்ள கைத்தறி நெசவாளர்களின் பிரச்னைகளை ஆராய்ந்து அவர்களுடைய நிலைமையை உயர்த்த என்னென்ன நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம் என்று சிபாரிசுகள் செய்யத் தமிழக அரசு 1972ம் ஆண்டு ஆகஸ்டு இறுதியில் ஒரு கமிட்டியை நியமித்தது. அது தனது அறிக்கையையும் சிபாரிசுகளையும் மிகத் துரிதமாகச் செய்து முடிக்க வேண்டும் என்று தாக்கீதும் விடுத்தது. இக்கமிட்டியும் அரசாங்கத்தின் உத்தரவுப்படி தமிழகத்திலுள்ள கைத்தறி நெசவாளர் செயல்படும் பிரதேசங்களைத் தவிர, கேரளம், மகாராஷ்டிரம், குஜராத் போன்ற இதர மாநிலங்களிலுமுள்ள கைத்தறி நெசவாளர் பகுதிகளிலும் சுற்றுப் பிரயாணம் செய்து 1973 பிப்ரவரி முடிவில் அறிக்கையைச் சமர்ப்பித்தது. சமர்ப்பித்த ஆறு மாதங்களுக்குப் பின்னரும் அந்த அறிக்கையைத் தமிழக அரசு இன்னமும் அதிகாரபூர்வமாக வெளியிடவில்லை. தமிழக சட்டசபை முன்னரும் இதுவரையில் அவ்வறிக்கை சமர்ப்பிக்கப்படவில்லை. அவசரம் என்றதால் ஆறு மாதங்களுக்குள் கமிட்டி சமர்ப்பித்த அறிக்கையை வெளியிட, மேலும் ஆறு மாதங்களுக்குப் பின்னரும் தமிழக அரசு முன்வராதது வியப்பையே உண்டாக்குகிறது. கமிட்டி சமர்ப்பித்த அறிக்கையில், நெசவாளர்களின் முன்னேற்றத்துக்கு அவசியமானவை என்று பல முக்கியமான சிபாரிசுகள் செய்யப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. எந்தெந்த அம்சங்களில் சிபாரிசுகள், யோசனைகள் கூறப்பட்டுள்ளன என்று பார்க்கலாம்:

1) தடங்கலின்றி, நியாயமான விலையில், தேவைப்படும் நூல் குறைவின்றி, கூட்டுறவுச் சங்கங்களிலுள்ள நெசவாளர்களுக்கும், மற்றவர்களுக்கும் கிடைக்கச் செய்யவும்;

2) கைத்தறிகளுக்கு நிதி வசதிகளை அதிகரிக்கவும், கைத்தறி உற்பத்திப் பொருள்களை ஏற்றுமதி செய்யவும் விற்பனை செய்யவும் திருப்திகரமான நிதி வசதி ஏற்பாடுகளைச் செய்யவும்;

3) நெசவாளர்களுக்கு வீட்டு வசதிகள் செய்து கொடுக்கவும்;

4) நெசவாளர்களுக்குச் சேமிப்பு, பாதுகாப்பு நிதி முதலிய வசதிகளைச் செய்யவும்;

5) நெசவாளர்களின் குழந்தைகளுக்குக் கல்வி வசதிகளும், தொழில் முறையில் கல்வி பயில வசதிகளும் ஏற்படுத்தவும்;

6) பஞ்சாலைகள், விசைத் தறிகள் ஆகியவற்றிலிருந்து எழும் கடும் போட்டியினின்று, கைத்தறி நெசவாளர்களைப் பாதுகாக்க ஏற்பாடுகளைச் செய்யவும்;

7) பருத்தி நூலைத் தவிர, செயற்கை நூல், பட்டு நூல், சரிகை போன்ற இதர வகை மூலப் பொருள்களைக் கிடைக்கச் செய்யவும்;

மற்றும் பல அம்சங்கள் குறித்தும் கமிட்டி சிபாரிசு செய்துள்ளதாகத் தெரிகிறது.

இவ்வளவு முக்கியமான அறிக்கையை இன்னமும் அரசாங்கத்தின் இருட்டறையில் பூட்டி வைத்திருப்பது, துரிதமாகப் பணியாற்றிய கமிட்டிக்கும் சந்தோஷமளிக்காது; நெசவாளர்களுக்கும் திருப்தி அளிக்காது. தமது பிரச்னைகளுக்கு விமோசனம் ஏற்படப் போகிறது என்று காத்துக் கொண்டிருப்பவர்களுக்கு ஏமாற்றமே அளிக்கும். கைத்தறி நெசவாளர் சங்கங்களும், பிரதிநிதிகளும், சட்டசபை உறுப்பினர்களும் கூடி இக்கமிட்டியின் அறிக்கையைத் தாமதமின்றி வெளியிட வேண்டும் என்று அரசாங்கத்தை வற்புறுத்த வேண்டும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## காந்தி ஜெயந்தி

சென்னை, கிண்டி காந்தி மண்டபத்தில் காந்தி பிறந்த நாளான அக்டோபர் 2ந் தேதி முதல் 7ந் தேதி வரை சிறப்பாகக் காந்தி ஜெயந்தி விழாவைக் கொண்டாடத் தமிழக கவர்னர் திரு கே. கே. ஷா ஏற்பாடு செய்திருக்கிறார். அக்டோபர் 2ந் தேதி காலை ஆறு மணியிலிருந்து மாலை வரை அகண்ட பஜனை நடத்தச் சென்னையில் உள்ள பல்வேறு பஜனை மண்டலிகளும், மாதர் சங்கங்களும் முன்வந்துள்ளன. அன்று காலை ஏழு மணிக்கு மெரீனா காந்தி சிலையினின்று காந்தி ஜோதி ஊர்வலம் ஒன்று புறப்படவிருக்கிறது. காந்திய நிர்மாணப் பணி புரிய நூறு மாணவர்கள் கொண்ட முகாம் ஒரு வாரம் நடைபெற இருக்கிறது. இதைத் தவிர காந்தியக் கருத்தரங்கும் சர்வோதயப் பொருட்காட்சியும் உண்டு. மத்திய நிதி மந்திரி சாவன், ஸ்ரீ காமராஜ், தமிழக முதல்வர் திரு மு. கருணாநிதி, ஸ்ரீ ஸ்ரீமன் நாராயணன் போன்ற பெரும் தலைவர்கள் இவ்விழாவில் பங்குபற்றிக் காந்திய சிந்தனைகளை உரைக் கோவையாக்கப் போகிறார்கள். மாலை நேரங்களில் பிரபல இசைக் கலைஞர்களின் துதிப் பாடல் நிகழ்ச்சிகளும் உண்டு.

காந்தி நாமம் வாழட்டும். காந்தியம் நம் உள்ளங்களில் வளரட்டும். ஆதவன் முன் பனி போல் நம் துயரங்கள் மறையக் காண்போம்.

## ஐ. ஐ. டி. மாணவர்கள் திறமை

சென்ற வாரம் சுய கட்டுப்பாட்டுடனும், தம் கையே தமக்கு உதவி என்ற நம்பிக்கையுடனும் சென்னை இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னலஜி மாணவர்கள் பொறுப்பு உணர்ச்சியோடு நடத்து கொண்டிருப்பதை

## ராஜாஜி சிந்தனை

அழகுள்ள பொருள் எதையும் கஷ்டப்படாமல் அடைய முடியாது. பல கலாசாரங்கள் சந்திக்கும் இடத்தில் தாற்காலிகமாகப் பல கஷ்டங்களை அனுபவிக்கத்தான் வேண்டியிருக்கும். ஆயினும் இறுதியில் இதனால் ஏற்படப் போகும் விளைவு அழகானதாகவே இருக்கும். பல்வேறு கலாசாரங்கள் சந்திக்கும்போது ஓரளவுக்கு அவைகளிடையே மோதல் ஏற்படுகிறது. ஆனால் அதைச் சமாளித்துவிட்டால் பின்னால் ஏற்படும் விளைவு சிறந்ததாக இருக்கும். பல வர்ணமுள்ள நூல்களைச் சேர்த்து நெய்யும்போதுதான் துணி அழகுள்ளதாகிறது. ஒரே நிற நூலைக் கொண்டு துணி நெய்வது சுலபம். ஆனால் பல வர்ண நூலைக் கொண்டு ஒழுங்கான முறையில் துணி நெய்வது கஷ்டமானதாகும். நெய்து முடித்த பின்னர் பார்த்தால் பல வர்ண நூல்களைக் கொண்டு நெய்யப்பட்ட துணிதான் அதிக அழகுடன் இருப்பதைக் காண்போம்.

அனைவருமே பாராட்டியாக வேண்டும். செப்டம்பர் மாதம் 5ந் தேதியிலிருந்து சென்னை ஐ.ஐ.டி.யைச் சேர்ந்த 3வது 4வது பிரிவு ஊழியர்கள் வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர். வேலைநிறுத்தத்தை விடுத்துச் சகஜ நிலைமையை உண்டாக்கினால் மேற்படி ஊழியர்களோடு அவர்களது பிரச்சனைகளைக் குறித்துப் பேச்சுவார்த்தை நடத்தத் தயாராயிருப்பதாக நிர்வாகம் சொல்லியும் ஊழியர்கள் அதற்குச் செவி சாய்க்காமல் ஐ.ஐ.டி. எல்லைக்குள் தண்ணீர் சப்ளை, மின்சார சப்ளை போன்றவற்றைத் துண்டித்து நாச வேலைகளில் ஈடுபட்டதாகத் தெரிகிறது. நிலைமை இந்த அளவு வரையில் சென்றதும் நிர்வாகத்தினர் போலீஸ் உதவியைக் கோரி ஐ. ஐ. டி. காம்பஸ் முழுவதும் சமூக விரோத சக்திகள் கையில் சிக்கிவிடாமல் காக்க நேர்ந்திருக்கிறது. (இதை எழுதி முடித்து, அச்சுக்குப் போகும் தறுவாயில் ஊழியர்களின் வேலைநிறுத்தம் வாபஸ் பெறப்பட்டதாகச் செய்தி வந்திருக்கிறது).

இந்த நிலையில் துண்டிக்கப்பட்ட நீர் சப்ளை, மின்சார சப்ளை இணைப்புக்களை மாணவர்களே முன் நின்று பல மணி நேரம் பெருமுயற்சி செய்து பழுது பார்த்துக் கொண்டதுடன் அமையாமல் சமையல் செய்வது, பரிமாறிக் கொள்வது, ஹாஸ்டல்களைச் சுத்தப்படுத்திக் கொள்வது, ஐ.ஐ.டி. நுழை வாயில் விடுதிகள், நீர்க் குழாய், மின்சார சப் ஸ்டேஷன் ஆகியவற்றைக் காவல் புரிவது உள்பட எல்லா வேலைகளையும் தாங்களே செய்து கொண்டு வேலைநிறுத்தத்தைச் சமாளித்திருக்கிறார்கள். தாங்கள் வேலைக்குப் போகாவிட்டால் ஐ.ஐ.டி.யே ஸ்தம்பித்துவிடும் என்று நினைத்தவர்களின் எண்ணம் ஐ.ஐ.டி. மாணவர்களால் இப்படி முறியடிக்கப்பட்டிருக்கிறது. வேலைகளையும் தாங்களே செய்து கொண்டு வகுப்புக்களுக்கும் தவறாமல் செல்கிறார்கள் மாணவர்கள்.

நாட்டில் மாணவ சமூகமும், இளைஞர்களும் இதுபோல் பொறுப்புடனும், கடமை உணர்வுடனும் இருக்க முடியுமானால் சமூக விரோத சக்திகளுக்கு எங்கும் இடமே இல்லாமல் செய்துவிட முடியும் என்பது உறுதி. ஐ.ஐ.டி. மாணவர்களுக்கு வாழ்த்துக்கள்.

## ஜார்துநாதன் சிலை

பாளையங்கோட்டையில் பேராசிரியர் ஒருவருக்கு நேர்ந்த அநீதி அவமானங்களைக் கண்டித்துச் சென்ற ஆண்டு மாணவர்கள் கண்டன ஊர்வலம் நடத்திய போது போலீஸாரால் துரத்தப்பட்டுத் தாமிர வருணி ஆற்றில் விழுந்து உயிர்நீத்த ஜார்து நாதன் என்ற மாணவருக்கு உள்ளூர் மாணவர்கள் ஒரு சிலை வைக்க முடிவு செய்துள்ளார்கள். ஆனால் அந்தச் சிலை வைக்க இடம் தர முடியாது என்று சர்க்கார் மறுத்துவிட்டதாகத் தெரிகிறது. 'முன்பு இதே போல் ஒரு சூழ்நிலையில் அண்ணாமலைப் பல்கலைக் கழக வாயிலில் உயிர் நீத்த மாணவர் ஒருவருக்குச் சிலை எழுப்பி அதை இப்போதிருக்கும் தமிழக முதல்வர் கருணாநிதியே திறந்து வைத்திருக்கிறார். அப்படியிருக்கும்போது இப்போது இந்தச் சிலைக்கு மட்டும் ஏன் மறுப்பு?' என்று நெல்லையில் மாணவர்கள் மகாநாட்டில் பேசும் போது திரு காமராஜ் அவர்களே மனங் குமுறிக் கேட்டிருக்கிறார். முதல்வர் திறந்து வைக்க முடியாத சிலைகளுக்கு இந்தத் தமிழ் மண்ணில் அவர் ஆட்சியில் அவ்வளவு சுலபமாக இடம் கிடைத்து விடுமா ?

## அக்டோபர் போராட்டம்

விலைவாசி உயர்வைக் கண்டித்தும், வேலையில்லாத் திண்டாட்டம், விவசாயிகள், நெசவாளர் பிரச்சனைகளைத் தீர்க்கக் கோரியும், பூரண மதுவிலக்கை அமுல் நடத்த வேண்டியும் தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் கட்சி காந்தி ஜெயந்தி நாளான அக்டோபர் 2ந் தேதிக்கு அடுத்த நாளிலிருந்து 12ந் தேதி வரை சர்க்கார் அலுவலகங்களுக்கு முன் மறியல் செய்யத் திட்டமிட்டிருக்கிறது. மறியல் மத்திய மாநில அரசுகளை எதிர்த்து நடத்தப்படுவது என்றும் இந்தப் போராட்டத்துக்குத் தயார் என்று இதுவரையில் ஒரு

## தமிழகத்தில் பிரதமர்

★ ராமேசுவரம் கோயில் யானைக்குப் பழங்கள் வழங்குகிறார்.

★ ஏழைக் கல்லூரி மாணவ மாணவிகளுக்கு உபகாரச் சம்பளத்துடன் இலவச உணவு, உடை, பாட நூல்கள் ஆகியவையும் அளித்து ஹாஸ்டல் அமைக்கத் தமிழக கவர்னர் திரு கே.கே.ஷா எடுத்துக் கொண்ட முயற்சிக்கு ராஜா சர் முத்தையா செட்டியார் இரண்டு லட்சமும், திரு எம். ஏ. எம். ராமசாமி இரண்டு லட்சமும் வழங்கி ஹாஸ்டலும், கலையரங்கமும் எழ வழி வகுத்துள்ளனர். சென்னை வெல்லிங்டன் கல்வி அறநிலைய மைதானத்தில் இந்த













நல்ல பணிக்கும் பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி அடிக்கல் நாட்டினார். ஸ்ரீமதி எம். எஸ். எஸ். பிரார்த்தனை கீதம் பாடினார்.

★ சென்னை எத்திராஜ் கல்லூரி வெள்ளி விழாவின் போது திரு வி. எல். எதிராஜ் அவர்களின் சிலையைத் திறந்து வைத்துப் பேசினார்.

★ பாம்பனில் புதிதாகக் கட்டப்படும் சாலைப் பாலத்தின் தோற்றத்தைப் பார்வையிடுகிறார்.

★ காரைக்குடியில் அழகப்பா கல்வி நிலையங்களின் வெள்ளி விழாவின்போது திரு அழகப்ப செட்டியார் உருவச் சிலையைத் திறந்து வைத்தார்.

லட்சம் பேருக்கு மேல் கையெழுத்திட்டிருக்கிறார்கள் என்றும் தெரிய வருகிறது. 'நாட்டின் அபாயகரமான பொருளாதார நிலைமைகளை மத்திய மாநில அரசுகள் உணரும்படி அவற்றுக்குச் சரியான முறையில் சுட்டிக் காட்டுவதற்காகவே இந்தப் போராட்டத்தை நடத்துகிறோம்' என்று தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் திரு பி. ராமச்சந்திரன் இது பற்றி விளக்கமாக அறிக்கை விட்டிருக்கிறார்.

## அமைச்சர்கள் முன்னால் பிரிவினை முழக்கம்

ராஜி.வெ.ரா. அவர்களுக்குத் தொண்ணூற்று நான்கு முடிந்து தொண்ணூற்று ஐந்தாவது வயது பிறக்கிறது. முதலில் இன்னும் பல்லாண்டுக் காலம் வாழ வேண்டும் என்று அவரை மனமார வாழ்த்துகிறோம். அதே சமயம் அவருடைய பிறந்த தின விழா மேடையில் தமிழ் நாடு அமைச்சர்கள் இருவரையும் அருகில் வைத்துக் கொண்டே 'சுதந்திரத் தமிழ்நாடு' கோரிக்கை எழுப்பப்பட்டுக் கைதட்டலோடு பேசப்பட்டிருப்பதைக் கண்டு வருந்துகிறோம். அதே மேடையில் திரு ஈ.வெ. ராமசாமி அவர்களுக்குத் தமிழகப் பிரிவினையின் சின்னமாகவே ஒரு கேடயமும், பெட்டகமும் வேறு அளிக்கப்பட்டிருக்கின்றன. இந்தகைய கூட்டத்தில் இந்திய அரசியல் சட்டத்தில் விசுவாசம் காட்டிப் பதவிப் பிரமாணம் செய்து கொண்ட அமைச்சர்கள் அமர்ந்திருப்பது நாடகமா, இரட்டை வேடமா என்பது புரியாமல்தான் மக்கள் மனம் தடுமாறுகின்றனர்.

## மக்களின் குரல்

சென்னையில் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் அமைச்சர் திரு நெடுஞ்செழியன் தி. மு. க.வின் வரலாற்றையும் அது தோன்றிய விதத்தையும், வளர்ந்த விதத்தையும் பிரமாதமாக வருணித்துப் பேசிக் கொண்டிருந்த போது எதிரேயிருந்த ஓர் ஆள், திடீரென்று எழுந்து, ''அதெல்லாம் இருக்கட்டும், இப்போது உள்ள விலைவாசியைப் பற்றிப் பேசுங்கள்'' என்று கத்தி யிருக்கிறார். உடனே அமைச்சர் வெகுண்டு, ''அந்த ஆள் குடித்து விட்டு வந்திருக்கிறான்'' என்று மேடையில் கூட இருந்தவரைப் பார்த்துச் சொல்லி யிருக்கிறார். மீண்டும் மீண்டும் அந்த ஆள், ''விலைவாசி என்னாச்சு?'' என்று கேட்டு மடக்கியிருக்கிறார். அமைச்சரும் அவர் குடித்துவிட்டு உளறுவதாகச் சமாளித்து மேலே பேசியிருக்கிறார்.

நிஜத்தைக் கேட்டாலே குடித்துவிட்டு வந்ததாகச் சொல்லிச் சமாளிக்க முடிகிறது. மதுவிலக்கு இருந்தால் இப்படி அமைச்சரால் சமாளிக்க முடியுமா? மதுவிலக்கு இல்லாததால் எவ்வளவு லாபம் பார்த்தீர்களா?

## பயனுள்ள கருவி

இரவு நேரங்களில் சாலைகளில் எதிர்த் திசைகளில் வரும் லாரிகள், கார்கள், பஸ்கள் பரஸ்பரம் விளக்குகளின் வெளிச்சத்தை ஒரு சிறிதும் குறைக்காமல் வருவதாலோ, அல்லது ஒருவர் விளக்கை மங்கல் செய்து எதிரே வரும் மற்றொருவர் அவ்வாறு செய்யாததாலோ நிறைய விபத்துக்கள் ஏற்படுகின்றன. இப்படிப்பட்ட விபத்துக்களைத் தவிர்ப்பதற்குப் பயன்படும் 'ஆட்டோ டிப்' என்ற கருவியைச் சென்னை அமிஞ்சிக்கரையில் உள்ள 'யுனிவர்சல் இண்டஸ்டிரியல் எலெக்ட்ரானிக்ஸ் பிரைவேட் லிமிடெட்' என்ற நிறுவனம் கண்டு பிடித்திருக்கிறது. இக்கருவி தானியங்கு முறையில் காரின் முன்புறமுள்ள விளக்கின் ஒளியை எதிரே கார் வரும்போது குறைத்து, அது கடந்து சென்றதும் மீண்டும் அதிகரிக்கச் செய்யும். கார், மோட்டார் சைக்கிள், பஸ், லாரி ஆகியவற்றில் இந்தக் கருவியைப் பொருத்துவதன் மூலம் பல விபத்துக்களைத் தவிர்க்க முடியும் என்று கூறுகிறார்கள். இந்தியாவில் இந்தக் கருவியை முதன் முறையாகச் சென்னையிலுள்ள இந்தக் கம்பெனி தான் தயாரித்துள்ளது என்று தெரிகிறது.

# “அரியும் சிவனும் ஒண்ணு!”

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

புராணங்களைப் பார்த்தால் சிவனிடம் விஷ்ணு தோற்றுப் போனதாகச் சில இடங்களில் இருக்கிறது. சிவன் விஷ்ணுவிடம் தோற்றுப் போனதாகவும் வரலாறுகள் இருக்கின்றன. சிவன் விஷ்ணுவைப் பூஜித்தார் என்று ஓர் இடத்தில் பார்க்கிறோம். சிவனை விஷ்ணு பூஜித்தார் என்று இன்னோர் இடத்தில் காண்கிறோம். சிவனின் அடியைக் காண முடியாமல் விஷ்ணு தோற்றுப் போனார் என்பது திருவண்ணாமலை ஐதிஹ்யம். விஷ்ணு-சிவன் இவர்களில் யார் பலசாலி என்பதற்காக தேவர்கள் வைத்த போட்டியில் சிவன் விஷ்ணுவிடம் தோற்றுப் போனார், அப்போது ஸ்தம்பித்துப் போன சிவதநுசுதான் ஜனகரிடம் வந்து பிறகு அதை ராமர் முறித்துப் போட்டார் என்று ராமாயணத்திலிருந்து தெரிகிறது. சிவனுக்கு விஷ்ணு பூஜிக்கையில் ஒரு பூ குறைய உடனே தம் கண்ணையே ஒரு கமலமாகக் கருதிப் பறித்தெடுத்து அர்ச்சித்தார் என்று திருவீழிமிழலை புராணம் சொல்கிறது. இங்கே சிவனுக்கு நேத்ரார்ப்பணேசுவரர் என்றே பெயர். சிவனுக்கு பிரம்மாவின் தலையைக் கிள்ளியதால் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட அதைப் போக்கிக் கொள்ள விஷ்ணுவை அவர் பூஜை செய்து, விஷ்ணுவின் அநுக்கிரகத்தால் தோஷத்தைப் போக்கிக் கொண்டார் என்று திருக்கண்டியூரில் ஐதிஹ்யம் இருக்கிறது. இங்கே பெருமாளுக்கு ஹரசாப விமோசகர் என்றே பெயர், இப்படி ஏகப்பட்ட கதைகள் சிவ உத்கர்ஷத்தையும், விஷ்ணு உத்கர்ஷத்தையும் காட்டச் சொல்லலாம்.

'ஒரே ஸ்வாமி தன்னுடனேயே சண்டை போட்டுக் கொள்ள முடியுமா? தன்னையே பூஜித்துக் கொள்ள முடியுமா?' என்று கேட்பீர்கள். உங்களுக்குச் சமாதானம் சொல்கிறேன்.

மேலே ராமன் முறித்த சிவதநுசைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? இந்தக் கதையை ராமனுக்கே சொன்னவர் பரசுராமர்தான். சீதா கல்யாணம் முடிந்து எல்லோரும் அயோத்திக்குத் திரும்பும்போது ராமரைப் பரசுராமர் வழிமறிக்கிறார். ''சிவ—விஷ்ணு யுத்தத்தில் 'மக்கார்' செய்த ருத்ர தநுசை உடைத்துப் பெரிய பேர் வாங்கி விட்டாயேடா! இதோ விஷ்ணுவின் வில் என்னிடம் இருக்கிறது. இதை நாணேற்றிப் பார்'' என்று ராமனிடம் சண்டைக்கு வருகிறார் பரசுராமர்.

இந்தப் பரசுராமர் யார்? விஷ்ணுவின் அவதாரம். இவர் சண்டைக்கு அழைத்த ராமர் யார்? அவரும் அதே விஷ்ணுவின் அவதாரம்தான். ஒரே விஷ்ணுவின் அவதாரங்கள் இங்கே சண்டை போட்டுக்கொள்ளவில்லையா? இதில் ஓர் அவதாரம் (பரசுராமர்) இன்னோர் அவதாரத்திடம் (ராமர்) தோற்றுப் போகிறது. சிவனை ஜயித்த விஷ்ணுவின் வில்லை நாணேற்றி, அதே விஷ்ணுவின் அவதாரமான பரசுராமரை ஓட்டிய இன்னோர் அவதாரமான ராமசந்திர மூர்த்தி பிறகு இதே சிவனுக்கு லிங்கம் வைத்துப் பூஜை செய்து ராமேசுவரத்தை உண்டாக்கியிருக்கிறார்.

ஜனங்களுக்குப் பக்தி உண்டாக வேண்டுமானால் அதற்கும் பகவானே வழிகாட்டுகிறார். எப்படி? தாமே பக்தனாக இருந்து வழி காட்டுகிறார். இதற்காகத்தான் சிவன், பக்தராக இருந்து விஷ்ணுவைப் பூஜிக்கிறார். விஷ்ணு, பக்தனாக இருந்து சிவனைப் பூஜிக்கிறார்.

இரண்டும் ஒன்றுதான். ஹரன்—ஹரி என்ற பெயர்களே ஒன்றாகத்தான் இருக்கின்றன. இரண்டும் சேர்ந்தே ஹரிஹரன், சங்கரநாராயணன் என்றெல்லாம் சமரச பாவத்தை வளர்க்கிற மூர்த்திகளாக இருக்கின்றன. ஆழ்வார்கள் பெருமாளையே ஹரிஹரனாகத்தான் கண்டார்கள்.

**தாழ்சடையும் - நீள்முடியும்; ஒண்மழுவும்-**
**சக்கரமும்;**
**சூழ்அரவும் - பொன்நாணும் தோன்றுமால்-**
**சூழும்**
**திரண்டருவி பாயும் திருமலை மேல் எந்தைக்கு**
**இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து**

என்று முதலில் சிவ அம்சங்களையும் பிறகு விஷ்ணு அம்சங்களையும் சொல்லி வேங்கடரமணனைப் பாடுகிறார் பேயாழ்வார். 'வெவ்வேறு உருவம் இருந்தாலும் ஒருவன் இன்னொருத்தனில் இருக்கிறான்' என்று சொல்லி, இங்கும் முதலில் சிவனையே பாடுகிறார் பொய்கை ஆழ்வார்.

**பொன் திகழுமேனிப் புரிசடையம்**
**புண்ணியனும்**
**நின்றுலகம் தாய நெடுமாலும் - என்றும்**
**இருவரங்கத்தால் திரிவரேலும் ஒருவன்**
**ஒருவன் அங்கத்தென்றும் உளன்**

பெரிய கவி கம்பனோ, ''அரன் அதிகன் உலகளந்த அரி அதிகன் என்றுரைக்கும் அறிவிலோர்க்குப் பரகதி சென்று அடைவது அரிய பரிசு'' என்று சொல்லிவிட்டார்.

மகாபெரியவர்கள் சொன்னது இருக்கட்டும். சின்னக் குழந்தைகூட, 'அரியும் சிவனும் ஒண்ணு: அறியாதவன் வாயில் மண்ணு' என்கிறது. இந்தக் குழந்தை வாக்கு ஆயிரம் பதினாயிரம் வருஷமாக இருந்துவந்திருக்கிறது. குடிசை போட்டால் ஓரிரண்டு வருஷத்தில் பாழாகிறது. செங்கல் வீடானால் நூறு வருஷம் இருக்கிறது. பாறாங்கல்லில் கட்டினால் ஆயிரம் வருஷம் நிற்கிறது. அப்படியே உள் பலம் இல்லாத வார்த்தைகளும் கால வெள்ளத்தில் அடிபட்டுப் போகின்றன. ஆனால் இந்தக் குழந்தைச் சொல் காலத்தைக் கடந்து நிற்கிறது. இதில் இருக்கிற சாரத்தினால்தான், தத்துவத்தால்தான் நிற்கிறது.

**( அடுத்த இதழில் : சிவமயம் — சர்வம் விஷ்ணு மயம் ஜகத்)**




டேனிஷ் கதை

# மறைந்த முகங்கள்

ஒரு காலத்தில் நான் ஒவ்வொரு இரவும் நகரில் நீண்ட தூரம் நடந்துவிட்டு வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன். இந்த இரவு நேரச் சஞ்சாரங்கள் என் பெற்றோருக்குப் பிடிக்கவேயில்லை. ஆகவே அவர்கள் மந்திரங்கள் எழுதப்பட்ட துண்டுக் காகிதங்களை எனது அறையின் மரச் சுவர்களில் இருந்த சிறிய சிறிய பிளவுகள் மறையுமாறு ஒட்டினார்கள். அதனாலும் பயனில்லை. நான் ஒவ்வொரு நாளும் மாலையில் வெளியே கிளம்பிச் சென்றேன். இரவு நீண்ட நேரம் கழித்து வீடு திரும்பியதும் எனது பெற்றோர் கவனக் குறைவாக மூடாமல் விட்டுவிட்ட ஒரு சிறிய பிளவுக்கருகே சுவரை ஒட்டியதுபோல் படுப்பேன். அந்தத் துவாரம் வழியே சில்லென்ற காற்று உட்புகுந்து வருவதை உணர்வேன். இது எனக்கு ஒரு விஷமத்தனமான மகிழ்ச்சியை அளித்தது. ஏனெனில், அந்த ஒட்டை வழியே கொடிய ஆவி வடிவங்கள் நுழைந்து வர முடியும். அவற்றிலிருந்து காப்பாற்றப் பட நான் விரும்பவில்லை; மனக் கிலேசத்தை இழந்து விடவும் நான் தயாராயில்லை!

இந்த இரவு நேர உலாக்களின் போது நான் என் நண்பர்களைப் போய்ப் பார்ப்பேன். இருள் கவிந்து நீண்ட நேரத்துக்குப் பின் திடுதிப்பென்று அவர்கள் முன் போய் நிற்பேனாதலால் அவர்கள் எந்த முக பாவங்களைச் சாதாரணமாக மறைத்துக் கொள்ள விரும்புவார்களோ, அவற்றை அந்த நேரத்தில் எனக்குத் தங்களையும் அறியாமல் காட்டிவிடுவார்கள். இந்த முகங்களை நான் சேகரித்தேன். மறு நாள் பகல் போதில் ஒரு கொடூரமான ஆனந்தத்துடன் அந்த முகங்களை ஆராய்வேன். ஒரு மீனவன் தான் விரித்த வலையை இரவில் படகுக்குள் இழுத்துப் போட்டுவிட்டு மறுநாள் காலையில் எத்தனை

டாம் க்ரிஸ்டென்ஸென்

மீன்கள் அகப்பட்டுக் கொண்டன என்று ஆராய்வது போல் நானும் என் கண்களுக்குள் சிறைப்பட்ட முகங்களை ஆராய்வேன். இருளைக் கண்டு அவர்கள் அடையும் பீதி; தங்களைப் பற்றியே அவர்கள் கொள்ளும் அச்சம் இவற்றை யெல்லாம் அம்முகங்களில் நான் பரிசீலனை செய்வேன். அவற்றிலுள்ள சுருக்கங்களும் கோடுகளும் எனக்கு இவற்றைக் காட்டிக் கொடுத்துவிடும். 'சைத்தான் நடனம்' ஆடுகிறவர்களுடைய பலதரப்பட்ட முகமூடிகளைச் சிலர் சேகரிப்பது போல் நான் இந்த முகங்களைச் சேகரித்தேன். ஒரே ஒரு முகம் குறைந்தது என் முகம்.



ஒரு நாள் மாலை நான் நகரின் க்யோபாஷி வட்டாரத்தில் உலாவிக் கொண்டிருந்தேன். என் நண்பன் — வியாபாரி மட்ஸுயாவின் கடையிலிருந்து மங்கலான வெளிச்சம் வெளியே தெரிந்தது.

அவனுடன் கடைசியாகப் பேசி இரண்டு வருஷங்கள் ஆகிவிட்டன. திடீரென்று ஒரு நாள் அவன் மடையனாகவும் மௌனியாகவும் மாறிவிட்டான் என்று கேள்விப்பட்டிருந்தேன். அன்று முதல் அவனை ஏமாற்றுவது மிகவும் சுலபமாகி விட்டதாம். பட்டுத் துணியை வியாபாரம் பண்ணுகையில் அவன் கண்களை மூடிக் கொண்டு நுண்ணிய உணர்வுள்ள விரல்களால் அதன் மென்மையை, தரத்தைச் சோதிப்பான். ஆனாலும் மிக விலை உயர்ந்த பட்டையும் அவன் சிறிதும் தயவின்றி மேசை மீதாகத் தள்ளி மிக மலிவான விலைக்கு விற்றுவிடுவான். இதையெல்லாம் கேள்விப்பட்டு நான் குழப்பத்தில் பல சந்தர்ப்பங்களில் ஆழ்ந்து போனதுடன் விநோதமான ஒரு குற்ற உணர்வும் என்னைப் பிடித்தது. இதை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

இப்போதும் அவன் கடையைத் தாண்டி நான் நடந்து விட்டேன். பிறகு, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ள முயல்வதில் என்ன பயன் என்று எண்ணியவனாய்ச் சிரித்துவிட்டு அவன் கடைக்குள் ஓர் அலட்சிய பாவத்தை வருவித்துக் கொண்டு நுழைந்தேன். என் நடத்தையை என்னாலேயே புரிந்துகொள்ள முடியவில்லை. ஏன் இந்தத் தயக்கமும் குழப்ப

ஓர் எழுத்தாளர் தம் தாய்நாட்டுச் சூழலை வைத்துத்தான் மிகச் சிறப்பாக எழுத முடியும் என்றாலும் பிற நாடுகளையும் மக்களையும் நன்கு ஆராய்ந்து அறிந்தபின் கதை எழுதிப் பெரும் புகழ் பெற்ற இலக்கியகர்த்தாக்களும் உண்டு. இத்தகையவர்களுள் டேனிஷ் கதாசிரியர் டாம் க்ரிஸ்டென்ஸென் ஒருவர். இவர் ஐரோப்பாவிலும், சீனா, ஜப்பான் ஆகிய நாடுகளிலும் மிக விரிவான சுற்றுப்பயணம் செய்து அப்பின்னணியில் பல கதைகள் எழுதியுள்ளார். ஜப்பானிய மக்களின் பழக்க வழக்கங்கள், வாழ்முறைகள், நம்பிக்கைகள் முதலியவற்றை நன்கு உணர்த்தும் கதை இது.

★

மும்? 'முகமூடி'களைச் சேகரிப்பது அலுத்து விட்டதா எனக்கு ?

மட்ஸுயா என்னை வரவேற்றுத் தேநீர் அளித்தான். கணப்பு அடுப்பை என் பக்கமாக நகர்த்தினான், என் கரங்களை உஷ்ணப்படுத்திக் கொள்ள வசதியாக.

என்னை ஏறிட்டுப் பார்க்காமலேயே அவன் கேட்டான் : " நீ எப்போதுமே இரவு நேரத்தில் உலாவச் செல்வாயாமே, நான் கேள்விப் பட்டது உண்மையா ?"

"ஆமாம்."

" ஆவி வடிவங்கள் எதையும் நீ சந்தித்த தில்லையா ?"

"இல்லை."

"முஜினுவை நீ பார்த்ததே இல்லையா ?"

"இல்லை. முஜினு என்பது என்ன என்று கூட எனக்குத் தெரியாது."

"எனக்கும் தெரியாதுதான். ஆனால் நான் ஒரு பூசாரியைக் கேட்டேன், 'நான் பார்த்தது என்ன?' என்று. அவர்தான் கூறினார். 'முஜினு' என்றார்."

"அது சரி, ஆனால் முஜினு என்பது என்ன?"

" எனக்குத் தெரியாது ; பூசாரிக்கும் தெரியவில்லை."

நான் குனிந்து என் முழங்கால்களைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தேன். மட்ஸுயா மேற்கொண்டு ஏதும் பேசாதிருக்கவே மின்னல் வேகத்தில் விருட்டென்று நிமிர்ந்து அவனைப் பார்த்தேன். அவன் வெற்றுப் பார்வையுடன் வாய் திறந்தபடி அமர்ந்திருந்தான். மோசக்காரன் என்று எனக்குத் தோன்றியது.

அடுத்த கணம் அவன் கரிய கண்களின் ஆழத்தில் ஒளி, இரு சிறிய புள்ளிகளாய்த் தோன்றியது. அவை அருகே அருகே நெருங்கி வந்தன. கும்மிருட்டு சூழ்ந்த சாலையில் வண்டியின் லாந்தர் விளக்கு முன்னேறி வருவது போல் வந்தன. கடைசியில் அவை மேல் பரப்புக்கே வந்து விட்டன. அவன் கண்களை மூடிக் கொண்டு உரக்க முனகினான். நினைவு திரும்பியது அவனுக்கு. "பயங்கரம் !" என்றான். "முஜினுவைச் சகிக்கவே முடியாது. அதை விளக்க என்னால் முடியவில்லை. ஏனென்றால் விளக்குவதற்கு ஒன்றுமில்லை. முஜினு ரொம்பக் கொடூரமானது. ஆனால் அது நம்மைத் தப்பிச் செல்ல அனுமதித்து விடும். அதாவது தப்பி வந்து விட்டதாக நாம் நினைப்போம். அது ஒருவனின் காதை அறுத்துக் கொண்டுவிட்டாலோ அல்லது ஒருவனைத் தின்று தீர்த்துவிட்டாலோ பரவாயில்லை. அதை என்னால் புரிந்து கொள்ள முடியும். ஆனால் அது ஒன்றுமே செய்வதில்லை! ஓ! அதை நினைத்தாலே பயமாயிருக்கிறது!" அவன் கூச்சலிடப் போகிறவன் மாதிரி வாயைத் திறந்து கொண்டு நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தான். அவன் வாயிலிருந்து வெளிவராத அந்த நீண்ட கூச்சல் என்னுடைய காதைச் செவிடாக்கி விட்டதுபோல் தோன்றியது.

பிறகு அவன் நாடைகள் மூடிக் கொண்டன. எந்தவிதமான முன்னுரையுமின்றி அவன் கதையைக் கூற ஆரம்பித்தான். மனப்பாடம் செய்து ஒப்பிப்பது போல், மிருதுவான, இசைப்பதுபோன்ற குரலில் பேச ஆரம்பித்தான்.

"ஒரு நாள் நான் வயல் வரப்பினூடே குறுக்கு வழியில் சென்று கொண்டிருந்தேன். குறுக்கு வழியில் ஒருவன் செல்கையில் கொடிய விஷயம் ஏதாவது எதிர்ப்படுவது சகஜம். கருகும் என்ற இருட்டு. ஒன்றுமே தெரியவில்லை. ஆனாலும் ஓர் ஏரியையும் ஒரு மரத்தையும் ஒரு பெண்மணியையும் மட்டும் என்னால் எப்படிப் பார்க்க முடிந்தது? சந்திரன் இல்லை. ஏரியிலிருந்தோ, மரத்திலிருந்தோ, அந்தப் பெண்மணியிடமிருந்தோ எந்தவிதமான ஒளியும் கிளம்பி வரவில்லை. ஆனாலும் என்னால் பார்க்க முடிந்தது ! அந்தப் பெண் சோகமே உருவாகக் குனிந்து கொண்டிருந்தாள். அவள் தோள்கள் விம்மல்களால் குலுங்கிக் கொண்டிருந்தன.

"நான் மேலே சென்று அவளுக்கு மிக அருகில் அமர்ந்துகொண்டேன். அவள் துயரம் தாங்காமல் ஏரியில் விழுந்து விடலாம் என்று பயந்தேன்.

# காய்கறியே கதியா, உங்கள் மனைவியின் தலைவிதியா?

சமைத்தல், துவைத்தல், அரைத்தல், இடித்தல்... மாளாத வேலை, தளராத சோர்வு. நாளெல்லாம் வீடே கதி. வெளி வேலைகளோ அவளுக்கு வெறு நாமம். இதற்கு விடிவு?

நீங்கள் மனது வைத்தால் நடக்கும் க்ளியர்டோன் உதவியோடு. பிரஷர் குக்கர், இஸ்திரிப்பெட்டி மிக்ஸர், மின்விசிறி...இதுபோல் பல பல க்ளியர்டோன் சாதனங்கள் உள்ளன. வாங்கிக் கொடுத்துப் பாருங்களேன். டாண் டாண் என்று வீட்டு வேலைகளை முடித்து விடுவாள். அதிக நேரம் மிஞ்சும் வெளி வேலைகளுக்கு.

கிட்டத்திலுள்ள க்ளியர்டோன் வியாபாரியிடம் அவளை அழைத்துச் சென்று காண்பியுங்கள்: வகை வகையான வீட்டுபயோக சாதனங்கள். பிடித்தமானவற்றை அவள் எடுத்துக் கொள்ளட்டும். அவள் வாழ்வு மாறிவிடும். உங்கள் வாழ்வும்தான்.



தி நேஷனல் ரேடியோ & எலக்ட்ரானிக்ஸ் கோ. லிட். பம்பாய் • கல்கத்தா • டெல்லி • சென்னை

Kleertone

க்ளியர்டோன்
—வீட்டுபயோக சாதனங்களின் படைப்பகம்

Creative Unit-826 -*Tam.*







SAA/LM/1074

லக்ஷ்மி மில்ஸ் கம்பெனி லிமிடெட் கோயம்புத்தூர் 641018



''அம்மா! எங்களுக்கு லீவு விட்டாங்க! எங்க ஹாட்டி ஸைத் தூக்கும் பிடிக்கணும்னு எங்களுக்காக வாங்கிய டானிக்கை நீ சாப்பிட்டுவிடு!''

'' 'உன்னைப் போன்ற இளம் பெண்ணொருத்தி இருக்க வேண்டிய இடமில்லையே இது' என்றேன். என் கரத்தை அவள் தோளின் மீது ஆறுதலாய் வைத்தேன். அவள் உடை மிக அற்புதமான பட்டினால் செய்யப்பட்டது என்பதைக் கவனித்தேன். உடனே என் கரத்தைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டேன். அத்தனை அற்புதமான பட்டை நான் என் கடையில் வியாபாரம் செய்ததே கிடையாது. இப்போதுகூட என் விரல்கள் அந்த மென்மையை உணர்கின்றன.

'' 'இந்த அகால நேரத்தில் இங்கு இருப்பது ஆபத்தாயிற்றே' என்று தொடர்ந்தேன். ஆனால் அவள் மேலும் குனிந்துகொண்டு துக்கம் தாங்காமல் விசும்பினாள். உடையின் அகன்ற கைகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

'' 'நான் என்ன செய்யலாம்? எந்தவிதமாக நான் உனக்கு உதவட்டும்? உன் துயரம் என்ன, அத்தனை.......'

''அவள் சற்று நகர்ந்து கொண்டாள்.

'' 'உனக்கு உதவத்தானே விரும்புகிறேன்? அவ்வளவு மோசமான நிலையிலா நீ இருக்கிறாய்? இல்லை. நீ அப்படிச் செய்யக் கூடாது! நான் சொல்வதைக் கேள்! ஏரியில் விழுந்து விடாதே! அழக் கூடாது நீ!'

'' என் பேச்சு அலுத்து விட்டதுபோல் அவள் மெல்ல எழுந்திருந்தாள். தன் முதுகை எனக்குக் காட்டியபடி நின்றாள். ஆனால் அவளை அங்கே தனியே விட்டுவிட்டு என்னால் திரும்பிச் சென்றுவிட முடியவில்லை. நான் எழுந்து அவளை நோக்கி நடந்தேன்.

'' 'வா! ஆபத்தான இந்த ஏரியை விட்டு அப்பால் போய்விடலாம்' என்றேன். அவள் திரும்பினாள். முகத்தை உள்ளங் கைகளால் மூடிக் கொண்டிருந்தாள். கண்ணீர் ததும்பிய கண்களை என்னிடமிருந்து மறைக்க விரும்புகிறாள் என்று நினைத்தேன். மூக்கு மீதாகவும் நெற்றி மீதாகவும் தடவி விட்டுக் கொள்வதுபோல் அவள் கரங்களை அசைத்தாள். நான் குனிந்தேன். அவளைப் பார்க்க, அவள் கண்களை நோக்கி ஆறுதல் கூற விரும்பினேன். ஆனால் — அவளுக்குக் கண்கள் இல்லை! மூக்கு இல்லை! வாய் இல்லை! அவள் முகம் முட்டையைப் போன்று அத்தனை வழுவழுப்பாக இருந்தது!'' மட்ஸுயா தன் கண்களை என்னை நோக்கித் திருப்பினான், ஏதோ உதவியை என்னிடம் கோருகிறவன் போல். ஆனால் நான் அவனது கன்னங்கள் ஒட்டிப் போயிருப்பதைத்தான் பார்த்தேன். அவன் முகத்தை எனது 'முகமூடிச் சேகரி'ப்பில் ஒன்றாக வைத்துக் கொண்டால் அவன் கன்னத்தின் பள்ளங்கள் அம்முகமூடியில் மிக வேடிக்கையான கோடுகளாக விளங்கும். அவனிடத்தில் இருந்த எல்லாவிதமான பரிகசிப்புக்குரிய விஷயங்களையும் சிறிதளவும் பரிதாபமின்றித் தெளிவாக நான் பார்த்தேன். ஏன் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

''ஹஹ்ஹா!'' என்று சிரித்தேன். என் கன்னங்கள் மீதாக என் உள்ளங் கையை உரசி அவை நீள் வட்ட வடிவில் குவிந்து உறுதியாக இருப்பதை உணர்ந்து பரம திருப்தி அடைந்தேன். ''பூ! இவ்வளவு தானா உன் முடிவு?'' என்று கடுப்புடன் துச்சமாகக் கேட்டேன்.

''இத்தனை கொடூரமாக என்னைக் கிண்டல் பண்ணாதே!'' என்று கெஞ்சினான் மட்ஸுயா. '' அது உண்மையிலேயே ரொம்பப் பயங்கரமாயிருந்தது என்கிறேனே. நான் வீரிட்டு அலறினேன். பயத்தில் கிட்டத்தட்ட செத்தே விட்டேன். வயல்வெளியில் குறுக்கே ஓடினேன். கரடுமுரடான நிலத்தில் தட்டித் தடுமாறிக் கொண்டு ஓடினேன், ஓடினேன், அப்படி ஓடினேன்! என் ஆன்மா என் வாயிலிருந்து தப்பிச் செல்ல முயல்வதுபோல் கத்தினேன். அந்தப் பெண் அதற்குப் பிறகு என்ன செய்தாளோ, திரும்பிப் பார்க்கத் தைரியமில்லை எனக்கு.''

மட்ஸுயா ஒரு விநாடி நிறுத்தினான். என் பாதங்களைப் பார்த்தபடி மேலே கதையைத் தொடரத் தன் சக்தியையெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டான்.

பிறகு அதே மிருதுவான குரலில் தன் கதையைத் தொடர்ந்தான் :

''அதிர்ஷ்ட வசமாகச் சற்றுத் தூரத்தில் நான் ஒரு சிறு ஒளியைக் கண்டேன். அது திறந்த ஜன்னல் வழியாக வருகிறதா அல்லது தரையில் இருக்கிறதா என்று தெரியவில்லை. ஆனால் சமீபத்தில் மனிதர்கள் இருக்கிறார்கள் என்பது நிச்சயமாயிற்று. ஒரு பெரிய கலை இறங்கினாற் போலிருந்தது. அந்த ஒளி பெரிதாகி வந்தது. இலேசாக நகர்ந்தது. மங்கலாக ஒருவரை என்னால் பார்க்க முடிந்தது. விளக்கு தரையில் இருந்தது.

''அதன் அருகே ஓடினேன். அவன் வீதி ஓரத்தில் சாமான்களை விற்பவன் எனக் கண்டேன். தனது மேஜையில் அப்போதுதான் விற்பனைக்குரிய பொருள்களை அடுக்க ஆரம்பித்திருந்தான்.

'' 'என்னைக் காப்பாற்று' என்று அலறினேன்.

''அப்போதுதான் நான் லாந்தர் விளக்கின் மங்கலான ஒளியில் பார்த்தேன்... அவனுக்கும் — முட்டையைப் போன்றிருந்தது அவன் முகம் !

'' நான் வீட்டுக்கு எப்படித் திரும்பி வந்து சேர்ந்தேனோ, எனக்கே தெரியாது!''

மட்ஸுயா சற்று முன்னால் குனிந்து இன்னமும் என் பாதங்களைப் பார்த்தவாறேயிருந்தான். அவன் நெற்றியில் ஏகப்பட்ட சுருக்கங்கள். கோணல் மாணலான கோடுகள் அவன் கீழ்த் தாடை தொய்ந்து கிடந்தது.

'' என்னால் புரிந்துகொள்ளவே முடியவில்லை'' என்று ரகசியம் பேசும் குரலில் சொன்னான். '' நடு இரவில் திடீரென்று விழித்துக் கொள்கிறேன். தாங்க முடியாத ஒரு வேதனையை உணர்கிறேன் — அதாவது இதைப் புரிந்துகொள்ள முடியாததால். என்னை விட்டுப் போகாத ஒரு பயங்கரமாக இது நிலைத்து விட்டது. நான் எப்படி இதை மறப்பேன் ? என்ன பண்ணுவேன்? எனக்குப் பைத்தியமே பிடித்துவிடும் போலிருக்கிறது.''

எனக்கு அவனிடம் கருணையே ஏற்படவில்லை. இழவு தட்டிப் போன அவன் தோற்றம் பரிகாசத்துக்குரியதாய் இருந்தது. அவன் வார்த்தைகள் நம்பத் தகுந்தவையாய் இல்லை. நான் சிரித்துவிட்டுக் கேட்டேன்: ''இவ்வளவுதானா ?''

மட்ஸுயா குழப்பம் அடைந்தவனாக என்னை நிமிர்ந்து பார்த்தான். அதே சமயம் நான் சில்லென்றிருந்த என் நெற்றியைத் துடைத்துக் கொண்டேன். அவன் நெற்றியில் இருந்தது போன்ற சுருக்கங்கள் என் நெற்றியில் இல்லை என்பதில் எனக்கு ஒரு குரூரமான மகிழ்ச்சி ஏற்பட்டது.

திடீரென்று மட்ஸுயாவின் முக பாவம் மாறியது. அவன் என்னை மிரள மிரள விழித்துப் பார்த்தான். வாயைத் திறந்து வீரிட்டு அலறினான்.

'' முஜினா !'' என்று அவன் என்னைச் சுட்டிக் காட்டிக் கத்தினான். ஒரு பெரிய ஓட்டையாக அவன் வாய் திறந்திருந்தது. அவன் தொண்டையில் ஒரு கிது கிது சத்தம். பிறகு அந்த அலறல்கள் எழுந்தன. ஒன்றன் பின் ஒன்றாகக் கிளம்பிய நீண்ட கூச்சல்கள். அவன் துள்ளி எழுந்த வேகத்தில் கணப்பு அடுப்பைக் கவிழ்த்தான். வெளியே ஓடினான்.

அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்று நான் எண்ணினேன். பேசாமல் தரையில் அமர்ந்தபடியே இருந்தேன். செந்நிறமாய் ஒளிர்ந்த கரித் துண்டு பாயில் ஓர் ஓட்டையை ஏற்படுத்திவிட்டது என்பதைப் பட்டும் படாமலும் கவனித்தேன். கோரைப் பாயில் ஒரு சிறு சுடர் தோன்றி அந்தக் கோரையோடு ஓடியது. மற்றொரு கோரையில் இன்னுமொரு சிறு சுடர் தோன்றி ஓடி வந்தது. அவை சந்தித்து எல்லாத் திசைகளிலும் பரவும் பெரு நெருப்பாக மாறிவிட்டன. புகையினால் என் கண்கள் எரிச்சல் அடைவது போல் உணர்ந்தேன். கண்களைக் கசக்கக் கரத்தை உயர்த்தினேன். அப்போது கண்கள் இல்லை எனக் கண்டேன்! உள்ளங் கையால் முகத்தைத் தடவி விட்டுக் கொண்டேன். முட்டையைப் போல் வழுவழுப்பாய் இருந்தது. நான் பயங்கர உணர்வுடன் துள்ளி எழுந்தேன். ஓர் அலமாரியின் பக்கம் ஓடினேன். கதவைப் பிய்த்து எறிவதுபோல் திறந்தேன். கண்ணாடி ஒன்றைக் கண்டெடுத்தேன். அதில் பார்த்தேன். ஒரு வெண்மையான, நீள்வட்ட வடிவமான புற ஓடு ! முகத்தின் உறுப்புக்கள் ஒன்றுகூட இல்லை! கேசம் மட்டும் விசித்திரமான விதத்தில் வழக்கம்போல் வளர்ந்துதான் இருந்தது — ஒரு முட்டையின் மீதாக !

ஆனால் இதையெல்லாம் பார்க்கிற என் கண்கள் ? என் கண்கள் எங்கே ?

எல்லாவற்றையும் மறக்கடிக்கும் பயங்கரம் என்னை ஆட்கொண்டது. கையில் கண்ணாடியுடன் நெருப்பு ஜ்வாலையினூடே பாய்ந்து ஓடித் தெருவை அடைந்தேன். சுற்றுமுற்றும் பார்த்தேன். சில ஜனங்கள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அமைதியாக நடந்தார்கள். இன்னும் நெருப்பை அவர்கள் பார்க்கவில்லை.

அவசரம் அவசரமாக நான் என் முகத்தை மறைப்பது போல் கரத்தை உயர்த்திக் கொண்டு வீட்டுக்கு ஓடினேன்.

அங்கே ஒரு தொப்பியைப் பற்றி என் முகத்துக்கு நேரே வைத்துக் கொண்டு என் பெற்றோரிடம் சென்றேன். கையில் நிலைக்கண்ணாடி இன்னமும் இருந்தது.

''ஏதாவது மந்திரம் இருக்கிறதா? சுவரில் ஒரு சிறு ஓட்டை இன்னும் பாக்கி இருக்கிறது. அது வழியே முஜினா நுழைந்துவிடும்.''

மந்திரம் எழுதப்பட்ட தாள்கள் சிலவற்றை அவர்கள் தேடி எடுத்து வந்தார்கள். உடனடியாக அந்தச் சிறிய ஓட்டையின்மீது ஒட்டினார்கள். அதன் பிறகு நான் மட்ஸுயாவின் நிலைக் கண்ணாடியை உயர்த்திப் பிடித்தேன். அது கைப் பிடியுடன்கூடிய விலை உயர்ந்த பழங் காலத்திய கண்ணாடி. தங்க முலாம் பூசிய சட்டம் உடையது. பின்புறம் நாரைகளின் உருவங்கள் செதுக்கப்பட்டிருந்தது. கண்ணாடியில் முகத்தைப் பார்த்தேன். என் பழைய முகம் தெரிந்தது.

மறு நாள் கியோபாஷி வட்டாரத்தின் ஒரு பெரும் பகுதி தீப்பிடித்து எரிந்து போயிற்று என்றும் மட்ஸுயாவின் சடலம் ஒரு வயல் பரப்பின் மையத்திலிருந்த ஒரு சிறு ஏரியில் கண்டெடுக்கப்பட்டது என்றும் கேள்விப்பட்டேன்.

இருட்டத் தொடங்கியபிறகு வெளியே போகும் துணிவே எனக்கு இப்போது இல்லை. என் பெற்றோர்கள் நான் ஆழ்ந்து படிக்கிறேன், பிரார்த்திக்கிறேன் என்று நினைத்துக் கொள்வார்கள். ஆனால் நானோ மட்ஸுயாவின் நிலைக்கண்ணாடியைக் கையில் வைத்துக் கொண்டு என் முகத்தை ஆராய்ந்தபடியே உட்கார்ந்திருப்பேன். ஏதாவது கடினமாகத் தெரிகிறதா, முட்டையாக மாறுகிறதா என்று பார்த்துக் கொண்டிருப்பேன். நான் இப்போதெல்லாம் ஒரே ஒரு 'முகமூடி'யைத்தான் ஆராய்கிறேன். என் முகமேதான் அது ! அதைப் பற்றி நினைத்தாலே அரண்டு போகிறேன்.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்:

கி. ராஜேந்திரன்

# சிவகாமியின் சபதம்

பதினேழாம் அத்தியாயம்

## வேலின்மேல் ஆணை

நரசிம்மர் தமது அங்கவஸ்திரத்தின் தலைப்பினால் சிவகாமியின் கண்ணீரைத் துடைத்தவண்ணம், ''நினைக்க நினைக்க ஒரு விஷயம் எனக்கு வியப்பை யளிக்கிறது!'' என்று கூறினார்.

சற்று முன் சிவகாமியின் முகத்தை ரதி ஏறிட்டுப் பார்த்தது போல் இப்போது சிவகாமி நரசிம்மரை ஏறிட்டுப் பார்த்தாள். 'அது என்ன வியப்பான விஷயம்?' என்னும் கேள்வியை அவளுடைய கண்களின் நோக்கும், புருவங்களின் நெரிப்பும் கேட்பன போலத் தோன்றின.

நரசிம்மர் சிவகாமியின் முகத்தைக் கண்களால் விழுங்கி விடுபவர் போல் பார்த்துக் கொண்டு கூறினார்: ''மூன்று வருஷ காலத்துக்குள் உன்னிடம் ஏற்பட்டிருக்கும் மாறுதலைத்தான் சொல்லுகிறேன். உனக்கு ஞாபகம் இருக்கிறதா, சிவகாமி? சக்கரவர்த்தியும் நானும் அந்த நாளில் உங்கள் வீட்டுக்கு வருவோம். என்னைக் கண்டதும் நீ கொஞ்சமும் கூச்சமோ, தயக்கமோ இல்லாமல் ஓடி வருவாய். என் கையைப் பிடித்துக் 'கரகர'வென்று இழுத்துக் கொண்டு போவாய். நம் இருவருடைய தந்தையரும் ஒரு பக்கம் பேசிக் கொண்டிருக்கும்போது நாம் இன்னொரு பக்கத்தில் கொட்டம் அடிப்போம்! சில சமயம் நான் உன்னை எனக்கும் பரதநாட்டியம் சொல்லிக் கொடுக்கும்படி கேட்பேன். நீ சொல்லிக் கொடுக்க முயல்வாய்; எனக்கு நன்றாய் வராது. அதைக் கண்டு நீ கலகலவென்று சிரிப்பாய். உன்னுடைய முல்லைப் பல் வரிசையைப் பார்த்து நான் மதி மயங்கி நிற்பேன்.

அமரர் கல்கி





இன்னும் சில சமயம் நாம் இருவரும் ஓடிப் பிடித்து விளையாடுவோம். சில சமயம் ஆயனர் அமைத்த கற்சிலைகளுக்கு மத்தியில் நீயும் ஒரு சிலையைப் போல் அசையாமல் நிற்பாய். நானும் வேண்டுமென்றே உன்னைச் சிலையாகப் பாவித்துக் கொண்டு மேலே போவேன். உன்னுடைய சிரிப்பின் ஒலியைக் கேட்ட பிறகு திரும்பிப் பார்த்து உன்னைப் பிடித்துக் கொள்வேன். 'அகப்பட்டுக் கொண்டாயா, சிவகாமி தேவி?' என்று பாடுவேன். இப்படி யெல்லாம் நாம் விளையாடுவதைப் பார்த்து நம்முடைய தந்தைமார்களும் சந்தோஷப்படுவார்கள். அதெல்லாம் ஒரு குதூகலமான கனவு மாதிரி இப்போது தோன்றுகிறது.''

''பிரபு! நான் ஏதோ மாறிப்போனதாகச் சொன்னீர்கள். எந்த விதத்தில் மாறியிருக்கிறேன்?'' என்று சிவகாமி கேட்டாள்.

''நல்ல வேளை! ஞாபகப்படுத்தினாய். எனக்குப் பதினாறு பிராயம் பூர்த்தியானபோது சக்கரவர்த்தி என்னைத் தேச யாத்திரைக்கு அழைத்துச் சென்றார். தெற்கே சித்தர் மலையிலிருந்து வடக்கே நாகார்ஜுன மலைவரையில் நாங்கள் யாத்திரை செய்தோம். மேற்கே காவிரி நதியின் ஜனன ஸ்தானம் வரையில் போயிருந்தோம். யாத்திரையை முடித்துக்கொண்டு நாங்கள் திரும்பி வருவதற்கு மூன்று வருஷங்கள் ஆயிற்று...''

''அந்த மூன்று வருஷங்களும் எனக்கு மூன்று யுகமாக இருந்தது'' என்றாள் சிவகாமி.

''மூன்று வருஷங்கள் கழித்து நான் திரும்பி வந்து மறுபடியும் உன்னைப் பார்த்தபோது நீ பழைய சிவகாமியாகவே இல்லை. தேவ சபையிலிருந்து அரம்பையோ ஊர்வசியோ வந்து ஆயனர் வீட்டில் வளர்வதாகவே தோன்றியது. உருவ மாறுதலைக் காட்டிலும் உன்னுடைய குணத்திலும் நடவடிக்கையிலும் காணப்பட்ட மாறுதல்தான் எனக்கு அதிக வியப்பை அளித்தது. என்னைக் கண்டதும் நீ முன்போல் ஆர்வத்துடன் ஓடி வந்து வரவேற்கவில்லை; கலகலப்பாகப் பேசவில்லை; தூண் மறைவில் மறைந்து கொண்டு நின்றாய்; நான் உன்னைப் பார்க்கும்போது நீ வேறு பக்கம் திரும்பிக் கொண்டாய்; நான் உன்னைப் பார்க்காத சமயங்களில் சாடைக் கண்ணால் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தாய்; தப்பித் தவறி நம் கண்கள் சந்திக்கும் சமயம் உடனே தலையைக் குனிந்து கொண்டாய்; உன்னுடைய கனிரென்ற சிரிப்பு மறைந்து விட்டது! சில சமயம் உன் கண்களில் நீர் ததும்பி நிற்பதைக் கண்டேன். ஒரு காரணமுமில்லாமல் நீ பெருமூச்சு விடுவதைக் கேட்டேன். எல்லாவற்றையும் விட அதிக வியப்பை எனக்கு அளித்தது என்னவென்றால், என்னை யறியாமல் நானே சில சமயம் பெருமூச்சு விடத் தொடங்கினேன்!...'' என்று நரசிம்மர் சொன்னபோது, சிவகாமி 'கலீர்' என்று சிரித்து விட்டாள்.

நரசிம்மர் மீண்டும் தொடர்ந்து கூறினார்: ''என் உள்ளத்திலும் ஒரு மாறுதலைக் கண்டேன். இரவும் பகலும் சதா சர்வ காலமும் உன்னுடைய நினைவு என்னுடைய இருதயத்தில் குடிகொண்டது. அந்த நினைவு, இன்பத்தையும் வேதனையையும் ஏக காலத்தில் அளித்தது. எப்பேர்ப்பட்ட முக்கியமான காரியத்தில் ஈடுபட்ட போதிலும் உன்னை என்னால் மறக்க முடியவில்லை. இந்த நிலைமையில் இந்தத் தாமரைக் குளக்கரையில் ஒருநாள் நாம் தனியாகச் சந்தித்தோம். மூன்று வருஷங்கள்



உன்னை வந்து பார்க்காமல் இருந்ததற்காக நீ என்னைச் சண்டை பிடித்தாய். கடைசியில் உன்னை மறப்பதில்லை என்று கையடித்துச் சத்தியம் செய்துகொடுக்கச் சொன்னாய். எனக்குச் சிரிப்பு வந்தது. உன்னை ஒரு கணமும் மறக்க முடியாமல் நான் திண்டாடிய திண்டாட்டம் எனக்கல்லவா தெரியும்? ஆனாலும் உன்னுடைய மனத் திருப்திக்காகச் சத்தியம் செய்து கொடுத்தேன். அதன் பிறகு இன்றுதான் நாம் இந்தக் குளக்கரையில் சந்திக்கிறோம். ஒருவேளை நீ இங்கு இருக்க மாட்டாயா என்ற ஆசையினால் வந்தேன். வந்து பார்த்தால், நீ இங்கே இருக்கிறாய். நம்முடைய உள்ளங்கள் தாம் எப்படி ஒத்திருக்கின்றன!'' என்று சொல்லி நரசிம்மர் நிறுத்தினார்.



''இவ்வளவெல்லாம் சொன்னீர்கள். நான் முதலில் கேட்ட கேள்விக்கு மட்டும் மறுமொழி சொல்லவில்லை!'' என்றாள் சிவகாமி.

''என்ன கேள்வி அது? தயவுசெய்து ஞாபகப்படுத்தினால் நல்லது'' என்றார் மாமல்லர்.

''மதுரைக்கும் வஞ்சிக்கும் திருமணத் தூதர்களை அனுப்புவதாக இருந்த விஷயம்தான்!''

நரசிம்மர் இலேசாகச் சிரித்துவிட்டு, ''அது உண்மைதான். மகனுக்குக் கல்யாணம் செய்ய வேண்டும் என்று எந்தத் தாயாருக்குத்தான் எண்ணமில்லாமல் இருக்கும்? என் தாயாருடைய ஏற்பாடு அது! ஆனால், நான் சக்கரவர்த்தியிடம் என் மனநிலையைத் தெரியப்படுத்தச் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தேன். அதற்குள் இந்த யுத்தம் வந்து அதற்கு அவசியமே இல்லாமல் செய்து விட்டது'' என்று கூறினார்.

''பிரபு! எனக்கு என்னவோ நிம்மதி இல்லை. மூன்றரை வருஷங்களுக்கு முன்பு இருந்தது போல் நாம் இருவரும் குழந்தைகளாகி விடக் கூடாதா என்று தோன்றுகிறது.''

''இல்லை சிவகாமி! மறுபடியும் குழந்தைகள் ஆவதற்கு ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன். அதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருக்கின்றன. முதலாவது, தேவி சிவகாமியைப் பார்த்த பிறகு குழந்தை சிவகாமியை நான் விரும்ப முடியாது. இரண்டாவது, காரணம், சக்கரவர்த்தி இப்போதே நான் போர்க்களம் போவதற்கு ஆட்சேபிக்கிறார்; நான் குழந்தையாயிருந்தால் சம்மதிப்பாரா?''

''பிரபு! தாங்கள் கூட உண்மையாகவே போர்க்களம் போவீர்களா?'' என்று சிவகாமி கவலையுடன் கேட்டாள்.

''அவசியம் போவேன். என் தந்தையுடன் அதைப் பற்றித்தான் மூன்று நாட்களாக வாதம் செய்து கொண்டிருக்கிறேன். நூறு வருஷ காலமாக அந்நியர்கள் காலடி வைக்காத பல்லவ சாம்ராஜ்யத்தில் இன்று சளுக்கர்கள் படையெடுத்திருக்கிறார்கள். அவர்களைத் துவம்ஸம் செய்து புத்தி புகட்ட வேண்டாமா?''

''பிரபு! அதற்குப் பல்லவ சைனியங்கள் இல்லையா? படைத் தலைவர்கள் இல்லையா? தாங்கள் ஏன் போக வேண்டும்?''

''பல்லவ சைன்யங்கள் அன்னியர்களை எதிர்த்து வீரப் போர் புரியும் போது நான் என்ன செய்வதாம்? அரண்மனையில் உட்கார்ந்து அறுசுவை உண்டி அருந்தி, அந்தப்புர மாதர்களுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருக்கட்டுமா? அப்படி நான் இருந்தால் ஆயனர் மகளின் காதலுக்குப் பாத்திரன் ஆவேனா?''

சிவகாமி கூறினாள்: ''பிரபு! தாங்கள் போர்க் களம் போவதைத் தடுப்பவள் நானல்ல. தாராளமாகச் சென்று பகைவர்களை வென்று வாகை மாலை சூடி வாருங்கள். ஆனால்....''

''ஆனால் என்ன?''

''என்னுடைய கோரிக்கையைப் பரிகாசம் செய்யக் கூடாது.''

''இல்லை சிவகாமி, சொல்லு!''

''வள்ளியம்மைக்குச் சுப்பிரமணியர் சத்தியம் செய்து கொடுத்தது போல்,

உங்கள் கையில் உள்ள வேலின் மேல் ஆணை வைத்துச் சொல்லுங்கள், போர்க்களத்திலும் என்னை மறப்பதில்லை யென்று!''

நரசிம்மர் புன்முறுவல் செய்து, ''இவ்வளவுதானே? 'என்னை மறந்து விடுங்கள்' என்று நீ ஆணையிடச் சொன்னால்தான் என்னால் முடியாது! மறக்காமலிருப்பதற்கு எத்தனை தடவை வேணுமானாலும் சத்தியம் செய்கிறேன். இதோ...!'' என்று வேலைத் தூக்கிப் பிடித்தவர், சட்டென்று தயங்கி நின்றார்.

''பிரபு! ஏன் தயங்குகிறீர்கள்? அகத்துள்ளே மனம் மாறி விட்டதா?'' என்றாள் சிவகாமி.

''இல்லை, சிவகாமி, இல்லை! இந்த வேல் என்னுடையது இல்லையே! இன்னொருவருடைய வேலின் மேல் ஆணை யிடலாமா என்றுதான் நான் யோசிக்கிறேன்.''

'' உங்களுடைய வேல் இல்லையா ? பின் யாருடையது?''

''அரங்கேற்றத்தன்று மதயானையின் மேல் வேல் எறிந்து ஆயனரையும் உன்னையும் தப்புவித்தானே, அந்த வீர வாலிபனுடையது. அந்த மகாவீரனை நேரில் கண்டு அவனிடம் கொடுக்க வேண்டும் என்று வைத்திருக்கிறேன்.''

''அப்புறம் அந்த வாலிபனை நீங்கள் பார்க்கவே இல்லையா?'' என்று சிவகாமி கேட்டாள்.

''மூன்று நாட்களாக நாடு நகரமெல்லாம் தேடுகிறோம்; அவன் மட்டும் அகப்படவில்லை.''

'' பிரபு ! அவன் இருக்கும் இடம் சொன்னால் எனக்கு என்ன தருவீர்கள்?'' என்று கேட்டாள் சிவகாமி.

''அவன் இருக்கும் இடம் உனக்குத் தெரியுமா? சீக்கிரம் சொல், சிவகாமி! உனக்கு என்னையேதான் கொடுத்திருக்கிறேனே? வேறு என்ன தரப் போகிறேன்?''

''அந்த வாலிபன் இப்போது எங்கள் வீட்டில் இருக்கிறான்.''

நரசிம்மர் துள்ளி எழுந்து, ''என்ன சொல்லுகிறாய், சிவகாமி! உங்கள் வீட்டுக்கு அவன் எப்படி வந்தான்?'' என்று கேட்டார்.

''முன்னே உங்களிடம் சொன்னேனல்லவா, ஒரு புத்த பிக்ஷு அடிக்கடி வந்து அப்பாவையும் என்னையும் வடநாட்டுக்கு வரும்படி அழைத்துக்கொண்டிருக்கிறார் என்று; — அந்த நாகநந்தி அடிகள்தான் அழைத்துக் கொண்டு வந்தார்.''

'' ஆகா ! சக்கரவர்த்தி கூறியது உண்மையாயிற்று.... சிவகாமி! அதோ கேள்!'' என்றார் நரசிம்மர்.

தூரத்தில் பேரிகை முழக்கம், சங்க நாதம், குதிரைகளின் காலடிச் சத்தம் எல்லாம் கலந்து கேட்டன.

''யார், சக்கரவர்த்தியா?'' என்றாள் சிவகாமி.

''ஆம்; சக்கரவர்த்திதான் வருகிறார். இதோ! நான் போய்ச் சக்கரவர்த்தியுடன் சேர்ந்து கொள்கிறேன். நீயும் சீக்கிரம் வீடு வந்து விடுவாயல்லவா?''

''குறுக்கு வழியாக வந்துவிடுவேன், பிரபு! தாங்கள் போர்க்களம் போவதற்கு முன்னால் இங்கே மறுபடியும் வருவீர்களா?''

''அவசியம் வருகிறேன்! உன் கருவிழிகளில் மின்னும் வேல்களின் மேல் ஆணை!'' என்று சொல்லி விட்டு நரசிம்மர் திரும்பிப் பார்த்துக் கொண்டே விரைந்து சென்று குதிரை மீதேறினார்.

அவர் போவதை மலர்ந்த முகத்துடன் பார்த்துக் கொண்டு நின்ற சிவகாமி, குதிரை காட்டுக்குள் மறைந்ததும் வீட்டை நோக்கி விரைந்து நடந்தாள். வீட்டிலிருந்து வந்தபோது அவளுடைய நடையில் காணப்படாத மிடுக்கும் குதூகலமும் இப்போது காணப்பட்டன. ரதியை அவள் மறந்து சென்றாலும், அவள் போவதைப் பார்த்துவிட்டு ரதி பின்தொடர்ந்து துள்ளி ஓடிற்று.

## பதினெட்டாம் அத்தியாயம்

# முத்து மாலை

பழந் தமிழ் நாட்டு மன்னர்களுக்குள்ளே ஒப்புயர்வு அற்றவரும், தமது இணையில்லாத புகழை என்றும் அழியாத வண்ணம் கல்லிலே செதுக்கி வைத்தவருமான மகேந்திர பல்லவ சக்கரவர்த்தியை அன்றொரு நாள் இரவில் யுத்தச் செய்தி வந்த அவசரத்தில் மத யானையின் வெறியினால் நிகழ்ந்த தடபுடலுக்கு மத்தியில் நேயர்களுக்கு அறிமுகப்படுத்தினோம்.

எத்தகைய சாமான்யக் குறுநில மன்னர்களையும்கூட அந்தந்த இராஜாங்கக் கவிகள் புத்தியிலே பிருகஸ்பதி என்றும், வித்தையிலே சரஸ்வதி என்றும், அழகிலே மன்மதன் என்றும், வீரத்திலே அர்ஜுனன் என்றும் கொடையிலே கர்ணன்

என்றும் வர்ணிப்பதுண்டு. இந்த வர்ணனை யெல்லாம் மகேந்திர சக்கரவர்த்தியின் விஷயத்தில் உண்மையிலேயே பொருந்துவதா யிருந்தது.

மகேந்திர வர்மர் ஆஜானுபாஹுவான தோற்றமுடையவர். அவருடைய கம்பீரமான முகத்தில் பல நூறு வருஷங்களாக வாழையடி வாழையாக வந்த இராஜ குலத்தின் வீரக் களையோடு சிறந்த கல்வி ஆராய்ச்சியினாலும் கலைப் பயிற்சியினாலும் ஏற்படும் வித்யா தேஜஸும் பிரகாசித்தது. காஞ்சி நகரின் பிரசித்தி பெற்ற பொற்கொல்லர்கள் சித்திர விசித்திர வேலைப்பாடுகளுடன் செய்த கிரீடம், குண்டலம், வாகுவலயம், வீரக்கழல் முதலிய ஆபரணங்களை அவர் தரித்திருந்தார். அவருடைய விசாலமான வீர லக்ஷ்மி குடிகொண்ட மார்பை, விதம் விதமான வர்ணங்களுடன் பிரகாசித்த நவரத்தின மாலைகள் அலங்கரித்தன. அபூர்வ அழகும், நயமும் மென்மையும் வாய்ந்த பட்டுப் பீதாம்பரங்களை உற்பத்தி செய்வதில் அந்த நாளிலேயே காஞ்சி நகரம் பெயர் பெற்றிருந்தது. அத்தகைய பீதாம்பரங்களை மகேந்திர சக்கரவர்த்தி அழகு பொருந்த அணிந்த போது, அவை அதிக சோபை பெற்று விளங்கியதாக நெசவுக் கலைஞர்கள் பெருமிதத்துடன் கூறினார்கள்.



**ம**கேந்திரர் தமிழ் மொழி, வடமொழி, பிராகிருதம் ஆகிய மூன்று மொழிகளிலும் சிறந்த தேர்ச்சிபெற்ற பண்டிதராக விளங்கினார். வடக்கே தக்ஷசிலம் முதல், தெற்கே கன்னியாகுமரி வரையில் உள்ள பண்டிதர்கள் மகாரஸிகரான மகேந்திர சக்கரவர்த்தியிடம் தங்களுடைய புலமையைக் காட்டிப் பரிசு பெறும் பொருட்டுக் காஞ்சி நகரில் வந்து மொய்த்தவண்ணம் இருந்தார்கள்.

அன்றைக்கு ஐந்நூறு வருஷங்களுக்கு முன்னால் வடநாட்டில் உஜ்ஜயினி நகரத்தில் அரசு செலுத்திக் காளிதாஸன் முதலிய மகாகவிகளை ஆதரித்த சந்திரகுப்த விக்ரமாதித்யருக்குப் பிறகு பண்டிதர்களுக்கும் கவிஞர்களுக்கும் கற்பக விருக்ஷமாக விளங்கியவர் காஞ்சி மகேந்திர சக்கரவர்த்திதான் என்பது வெகுஜன வாக்கா யிருந்தது.

சித்திரம், சிற்பம் ஆகிய கலைகளில் சக்கரவர்த்தி ஆர்வம் கொண்டிருந்த தோடல்லாமல் அவற்றை நன்றாகப் பயின்று அந்தந்தக் கலையில் வல்லவர்களாயிருந்த கலைவாணர் எல்லோரும் பார்த்து வியக்கும்படியான தேர்ச்சியும் பெற்றிருந்தார்.

சிற்பத் துறையில் மகேந்திரரின் அதிசயமான கற்பனைத் திறனைக் கண்டு வியந்து, சிற்ப சாஸ்திர பண்டிதர்கள் அவருக்கு 'விசித்திர சித்தர்' என்ற பட்டத்தை வழங்கியிருந்தார்கள். அவ்விதமே சித்திரக் கலை வல்லவர்களிடம் 'சித்திரக்காரப் புலி' என்னும் பட்டத்தைச் சக்கரவர்த்தி பெற்றிருந்தார். **'மத்த விலாஸப் பிரகசனம்'** என்னும் ஹாஸ்ய நாடகத்தை வடமொழியில் இயற்றி **'மத்த விலாஸர்'** என்னும் பட்டத்தை அடைந்திருந்தார்.

சங்கீத சாஸ்திரத்தைக் கரைகண்டிருந்த ருத்ராசாரியாரிடம் அவர் சங்கீதக் கலை பயின்று, ஏழு நரம்புகள் உடைய 'பரிவாதினி' என்னும் வீணையை அபூர்வமாய்க் கையாளும் திறமை பெற்றிருந்தார். தாள வகைகளிலே 'ஸங்கீர்ண ஜாதி' தாளத்தை அதிசயமாகக் கையாளும் வல்லமை காரணமாக 'ஸங்கீர்ண ஜாதிப் பிரகரணர்' என்ற பட்டம் அவருக்கு அளிக்கப்பட்டிருந்தது.

மகேந்திரர் இளம் பிராயத்தில் சமண மதத்தில் ஈடுபட்டிருந்து பிற்காலத்தில் சிவபக்திச் செல்வரான பிறகு, எந்த மதத்தையும் துவேஷிக்காதவராய்,— தமது சாம்ராஜ்யத்திலிருந்த சைவர், வைஷ்ணவர், பௌத்தர், சமணர், சாக்தர் ஆகிய சகல மதத்தினரையும் தர்மம் தவறாமல் பரிபாலித்து வந்தபடியால், 'குணபரர்' என்ற சிறப்புப் பெயரும் அவருக்கு ஏற்பட்டிருந்தது. 'திருவதிகை' ஸ்தலத்தில் அவருடைய கொடையினால் கட்டப்

பெற்ற சிவாலயத்துக்குக் 'குணபரேச்வரம்' என்ற பெயர் வழங்கிற்று.

மகேந்திர சக்கரவர்த்திக்கு முற்பட்ட சுமார் மூந்நூறு வருஷ காலத்தில் வடநாட்டிலிருந்து பண்டிதர்களும், கவிகளும், சமண முனிவர்களும், புத்த பிக்ஷுக்களும் இடைவிடாமல் தென்னாட்டின் மீது படையெடுத்து வந்து காஞ்சி நகரில் வித்யாபீடங்களை ஏற்படுத்தி வந்தார்கள். இக்காரணத்தினால், நமது வரலாறு நிகழ்ந்த காலத்தில் தமிழகத்தில் ஸம்ஸ்கிருதமும் பிராகிருதமும் மிக்க பிரபலமடைந்து, செந்தமிழ் மொழியின் சிறப்பை ஓரளவு மங்கச் செய்திருந்தன என்பதையும் நேயர்கள் தெரிந்து கொள்ளுதல் அவசியமாகும்.

திருநாவுக்கரசர் முதலிய சைவ நாயன்மார்களும், பொய்கையார் முதலிய வைஷ்ணவ ஆழ்வார்களும் பக்திச் சுவை சொட்டும் பாடல்களைப் பொழிந்து தெய்வத் தமிழ் மொழியை மீண்டும் சிம்மாசனம் ஏறச் செய்த மகோன்னத காலம் தமிழகத்தில் அப்போது தான் ஆரம்பமாகி யிருந்தது. எனவே, மகேந்திர சக்கரவர்த்தியின் பட்டங்கள் பெரும்பாலும் வடமொழியில் இருப்பதன் காரணத்தை நேயர்கள் ஊகித்து அறியலாம்.

மகாராஜாதி ராஜ — பூமண்டலாதிபதி — திரிபுவன சக்கரவர்த்தி மத்த விலாஸ — விசித்திர சித்த — ஸங்கீர்ண ஜாதிப் பிரகரண — சித்திரக்காரப்புலி— குணபரரான மகேந்திர பல்லவ சக்கரவர்த்தியை இத்தனை நேரம் ஆயனர் வீட்டு வாசலிலேயே நிறுத்தி வைத்து விட்டதற்காக வாசகர்களின் மன்னிப்பைக் கோருகிறோம். அவ்விதம் நாம் அந்த மன்னர் பெருமானை நிறுத்தி வைத்துவிட்ட போதிலும், ஆயனச் சிற்பியார் அவரை வரவேற்று உபசரிப்பதில் சிறிதும் காலந் தாழ்த்திவிடவில்லை. சக்கரவர்த்தியின் வருகையை அறிவித்த பேரிகை ஒலி வெகுதூரத்தில் கேட்டபோதே ஆயனர் பரபரப்புடன் வீட்டு வாசலுக்கு வந்து அவரை வரவேற்க ஆயத்தமாக நின்றார்.

குதிரையிலிருந்து இறங்கும்போதே சக்கரவர்த்திப் பெருமான், "ஆயனரே! அன்றிரவு சுகமாக வந்து சேர்ந்தீர்களா? சிவகாமி சௌக்கியமா?" என்று கேட்டுக் கொண்டு இறங்கினார்.

ஆயனர், முன்னால் ஓர் அடி சென்று கும்பிட்டு, "ஆகா! சுகமாக வந்து சேர்ந்தோம்! குழந்தைதான் மூன்று நாட்களாக அவ்வளவு சௌக்கியமில்லாமல் இருந்தாள்....." என்பதற்குள், மகேந்திர பல்லவர், "அப்படியா? இப்போது எப்படி இருக்கிறாள்?" என்று கவலைக் குரலில் கேட்டார்.

"இன்று சற்றுப் பாதகமில்லை" என்றார் ஆயனர்.

எல்லோரும் வீட்டுக்குள் சென்றார்கள். சக்கரவர்த்தி வரும் சமயங்களில் அமர்வதற்காகவே ஆயனர் ஓர் அழகிய கல் சிம்மாசனத்தை அமைத்திருந்தார். அந்தச் சிம்மாசனத்தில் மகேந்திரர் அமர்ந்ததும், ஆயனர் சிவகாமிக்குச் சமிக்ஞை செய்ய அவள் அருகில் நெருங்கி வந்து சக்கரவர்த்திக்கு நமஸ்கரித்தாள்.

அப்போது ஆயனர், "பெருமானே! அரங்கேற்றம் நடுவில் தடைப்பட்ட



காரணத்தினால் குழந்தை உற்சாகம் இழந்திருக்கிறாள். அவளுடைய சௌக்கியக் குறைவுக்கு அதுதான் காரணம். ரஸிக சிரோமணியான நாங்கள்தான் அவளுக்கு ஆசி கூறி உற்சாகப்படுத்த வேண்டும்" என்றார்.

"ஆயனரே! உமது குமாரி அன்றைக்கு நடனமாடியதாகவே எனக்குத் தோன்றவில்லை. நடனக் கலையே ஓர் உருவம் எடுத்து வந்து ஆடியதாகவே தோன்றியது" என்றார் மகேந்திரர்.

"ஸங்கீர்ண ஜாதி தாளத்தை உபயோகப்படுத்தி ஓர் ஆட்டம் கற்பித்திருந்தேன்; அதை ஆட முடியாமல் போய்விட்டது" என்று ஆயனர் ஏமாற்றமான குரலில் கூறினார்.

"ஆம்; ஆம்! இன்னும் என்னவெல்லாமோ விந்தைகள் வரப் போகின்றன என்று எனக்குத் தெரிந்துதானிருந்



தது. நடுவில் எழுந்து போக நேர்ந்ததில் எனக்கு ஏற்பட்ட வருத்தத்தைச் சொல்லி முடியாது. அவ்வளவு முக்கியமான செய்தியாயிரா விட்டால் போயிருக்க மாட்டேன்!'' என்றார் சக்கரவர்த்தி.

''நானும் கேள்விப்பட்டேன், பிரபு! நமது ராஜ்யத்துக்குள்ளே அந்நியர்கள் படையெடுத்து வந்திருக்கிறார்களாமே? என்ன தைரியம், என்ன துணிச்சல் அவர்களுக்கு?'' என்று ஆயனர் உண்மையான ஆத்திரத்துடன் கூறினார்.

''அந்தத் துணிச்சலுக்குத் தகுந்த தண்டனையை அவர்கள் அடைவார்கள், ஆயனரே! பல வருஷ காலமாகப் பல்லவ ராஜ்யத்துக்குள் பகைவர் படைகள் நுழைந்ததில்லை. நான் போர்க்களத்தைக் கண்ணால் காண வேண்டும் என்பதற்காக என் தந்தை என்னை இலங்கையில் நடந்த போருக்கு அனுப்பி வைத்தார். ஆனால், நரசிம்மனுக்கோ இங்கேயே போர்க்களத்தைப் பார்க்கும்படியான பாக்கியம் நேரிட்டிருக்கிறது. வாதாபி அரசன் புலிகேசி பெரும் படைகளைத் திரட்டிக் கொண்டு படையெடுத்து வருகிறான். நாமும் பெரும் பலம் திரட்டிக் கடும் போர் செய்ய வேண்டியிருக்கும். ஆனால், ஒரு விஷயம் சொல்லுகிறேன். நமது ராஜ்யத்தில் சளுக்கர் படையெடுத்ததனால் எனக்கு உண்டாகும் கோபத்தைக் காட்டிலும் அதனால் சிவகாமியின் அரங்கேற்றம் தடைப்பட்டதுதான் அதிகக் கோபத்தை உண்டாக்குகிறது. இந்தக் குற்றத்துக்குத் தகுந்த தண்டனையை அவர்கள் அனுபவித்தே தீர வேண்டும்!'' என்றார்.

இதைக் கேட்ட ஆயனர் பெருமையினால் பூரித்தவராய், அருகில் தலை குனிந்தவண்ணம் நின்ற சிவகாமியை அருமையுடன் நோக்கினார்.

சக்கரவர்த்தி மேலும் கூறினார்: ''அரங்கேற்றத்தன்று நான் என்னவெல்லாமோ திட்டம் போட்டிருந்தேன். அதெல்லாம் ஒன்றும் முடியாமல் போயிற்று. சபையிலே செய்திருக்க வேண்டிய சம்மானத்தை இங்கேயாவது செய்யலாம் என்று உத்தேசித்திருக்கிறேன். அதற்கு ஆட்சேபணை ஒன்றும் இல்லையே?'' — இவ்விதம் சொல்லிக் கொண்டு சக்கரவர்த்தி தம் கையிலிருந்த இரத்தினப் பையிலிருந்து அழகான இரட்டைவட முத்து மாலையை எடுத்தார்.

அப்போது ஆயனர், ''பெருமானே! தங்கள் திருக் கரத்தினால் கொடுக்கும்போது எங்கே கொடுத்தால் என்ன? சிவகாமி! உன் பாக்கியமே பாக்கியம்! இந்தப் பரத கண்டத்துக்குள்ளே சகல கலைகளின் நுட்பங்களையும் நன்குணர்ந்தவரான விசித்திர சித்த மகாப் பிரபு உன்னுடைய கலைத் திறமையை மெச்சி உனக்குச் சம்மானம் அளிக்கப் போகிறார்!'' என்று கூறிச் சமிக்ஞை செய்யவும், சிவகாமி முன்னால் வந்து சக்கரவர்த்தியைப் பணிவுடன் வணங்கிக் கரங்களை நீட்டினாள்.

மகேந்திரர் முத்து மாலையை எடுத்துச் சிவகாமியின் நீட்டிய கரங்களில் வைத்தபோது.... அடடா!—இதென்ன மீண்டும் அபசகுனம்! — மாலை அவள் கையிலிருந்து நழுவிக் கீழே தரையில் விழுந்துவிட்டதே!

ஆயனரின் முகம் சட்டென்று சுருங்கியது. மகேந்திர பல்லவருடைய திடசித்தம்கூடச் சிறிது கலங்கிவிட்டதாக அவருடைய புருவங்களின் நெரிப்பிலிருந்து தெரிந்தது.

சிவகாமியின் மனத்திலும் ஏதேனும் துணுக்கம் ஏற்பட்டிருக்குமோ என்னவோ, நமக்குத் தெரியாது. ஆனால், அடுத்த கணத்தில் அவளுடைய முகம் மலர்ந்ததைப் பார்த்தால் அவளுடைய உள்ளமும் மலர்ந்திருக்க வேண்டும் என்று நிச்சயமாய்த் தெரிந்தது.

கீழே விழுந்த முத்து மாலையை அந்தக் கணத்திலேயே குமார சக்கரவர்த்தி சட்டென்று குனிந்து எடுத்தார். எடுத்த மாலையைச் சிவகாமியின் நீட்டிய கரங்களில் அவர் வைக்க, சிவகாமி அதை ஆர்வத்துடன் வாங்கிக் கண்களில் ஒத்திக் கொண்டு கழுத்திலும் அணிந்து கொண்டாள். அந்த முத்துமாலைப் பரிசைக் குமார சக்கரவர்த்தியின் கையினால் பெற்றுக் கொள்ள நேர்ந்தது பற்றிச் சிவகாமியின் உள்ளத்தில் பொங்கிய உவகை முகத்திலும் பிரதிபலித்தது இயல்பேயல்லவா?

(தொடரும்)



ஸ்வீடிஷ் கதை

# நரகத்துக்குச் சென்ற லிப்ட்

பார் லகர்க்விஸ்ட்

அந்த நவநாகரிக ஹோட்டலின் முன் வராந்தாவுக்கு வந்த மிகப் பெரிய பணக்காரரான மிஸ்டர் ஸ்மித்தும், அவரது அன்புக்குரிய இள நங்கையும் இணைந்த கைகளுடன் வந்து லிஃப்டுக்கு அருகே நின்றனர். அந்த நங்கை பூசிக் கொண்டிருந்த உயர்ந்த ரக வாசனைப் பவுடரின் மணம் அந்த இடம் முழுதும் விரைவில் ஆக்கிரமித்துக் கொண்டது.

மிஸ்டர் ஸ்மித் லிஃப்டின் கதவைத் திறந்து அவ்வெழில் நங்கையை ஒயிலாக அணைத்தபடியே உள்ளே ஏற்றிவிட்டுத் தாமும் ஏறிக் கொண்டு கதவைச் சாத்தினார். பிறகு இருவரும் மெத்தை தைத்த ஆசனத்தில் மிகவும் நெருக்கமாக அமர்ந்தனர். அவர்கள் முகங்களில் ஒரே மகிழ்ச்சிப் பெருக்கு. அவள் தன் செவ்வதரங்களைச் சிறிதே திறந்தாள். இருவரும் ஈருடல் ஓருயிராய் நெருங்கி யிருந்தனர். சற்று முன்புதான் அவர்கள் இருவரும் அந்த ஹோட்டலின் மேல் மாடியில், வெண்மதி விரித்த தண்ணிலவில், விண்மீன்கள் கண் சிமிட்டி உற்சாகமூட்ட விருந்து அருந்தி விட்டுத் திரும்பியிருந்தனர். இப்பொழுது அவர்கள் வெளியே உல்லாசமாகப் பொழுதைக் கழிக்கப் புறப்பட்டனர்.

''மேலே மாடியில் நாம் விருந்துண்டது தேவலோக அநுபவமாக இருந்தது! காதல் என்றால் என்ன என்பதை உணர முடிந்தது. மனப்பூர்வமாக என்னைக் காதலிக்கிறீர்கள் இல்லையா?'' என்று கேட்டாள் அந்தப் பெண்மணி.

அதற்கு மிஸ்டர் ஸ்மித் பதில் அளிக்கும் வகையில் அவள் இதழ்களில் முத்தத்தைப் பதித்தார். லிஃப்ட் கீழே போய்க் கொண்டிருந்தது.

'' கண்ணே! நீ வந்தது நல்லதாய்ப் போயிற்று. இல்லையேல் எனக்கு ரொம்பவும் கஷ்டமாக இருந்திருக்கும்!'' என்றார் ஸ்மித்.

''வாஸ்தவம். ஆனால் 'அவர்' என்னை எவ்வளவு நச்சரிக்க ஆரம்பித்து விட்டார் தெரியுமா? உங்களால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது. நான் புறப்படுவதற்குத் தயாரானேனோ இல்லையோ, 'எங்கே போகிறாய்?' என்று கேட்கத் தொடங்கினார். 'எனக்கு விருப்பமான இடத்துக்குப் போவேன். நான் ஒன்றும் சிறைக் கைதி அல்லவே?' என்றேன். உடனே அவர் என் எதிரில் உட்கார்ந்து நான் சிங்காரித்துக் கொள்வதையும் உடை உடுத்துக் கொள்வதையும் உற்றுப் பார்த்துக் கொண்டேயிருந்தார். உம், அது இருக்கட்டும்; என் புதுப் பட்டு உடை எனக்குப் பொருத்தமாக இருக்கிறதா? ஒருவேளை என் மேனிக்குச் சிவப்பு வண்ணம் எடுப்பாக இருக்குமோ?''

''உனக்கு எல்லாமே பொருந்துகிறது. இன்றுபோல் நீ எனக்கு என்றுமே அழகாகத் தோன்றியதில்லை. இன்றுதான் நீ மிக மிக வனப்பாக இருக்கிறாய்!'' என்றார் ஸ்மித்.

''நான் வெளியே போகப் புறப்பட்ட போது, 'அவர்' என் கைகளைப் பற்றி எப்படி அழுத்தினார் தெரியுமா? — இன்னும் வலிக்கிறது. ஆனால் அவர் ஒரு வார்த்தைகூட என்னிடம் பேசவில்லை. என்னிடம் அவருக்கு ஒரு மிருகப் பிராயமான அன்பு. — உங்களுக்கு அது புரியவே புரியாது. பிறகு நான் 'போய் வருகிறேன்' என்றேன். ஒரு வார்த்தை பதில் சொல்ல வேண்டுமே, ஊஹூம். கிடையாது. எவ்வளவு பயங்கரமான மனிதர்! எனக்குப் பொறுக்கவே முடியவில்லை!'' என்றாள்.

''பாவம், அற்பன்!'' என்றார் ஸ்மித்.

''நான் வெளியே போய், என் விருப்பப்படி கொஞ்ச நேரம் கூடச் சந்தோஷமாக இருக்கக் கூடாது அவருக்கு. ஆம், இவ்விஷயத்தில் அவர் எவ்வளவு கண்டிப்பாக இருக்கிறார் தெரியுமா? உங்களுக்கு அவரைப் பற்றி இவ்விஷயத்தில் எதுவுமே தெரிந்திராது. எதையுமே அவரால் சாதாரணமாக, இயல்பாக




ஆசிரியர் ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்தவர். கவிஞர், நாவலாசிரியர், நாடகாசிரியர். ஸ்வீடிஷ் நாட்டு இலக்கியத்துக்குப் புத்துயிர் ஊட்டியவர் என்ற பெயர் எடுத்தவர். 1891ல் பிறந்த இவர் 1951ம் ஆண்டில் நோபல் பரிசு பெற்றார்.

எடுத்துக்கொள்ள முடியாது. ஒரு சின்ன விஷயத்தைக் கூட அவர் உயிர் போகிற பிரச்னையாக எடுத்துக் கொண்டு விடுவார். இப்படி நான் முழுதும் இருந்தால் எனக்கு எப்படி இருக்கும் என்று பாருங்கள்!'' என்றாள்.

''என் செல்லக் கனியே! எவ்வளவு கஷ்டம் அனுபவித்து வருகிறாய்; பாவம்!'' என்றார் மிஸ்டர் ஸ்மித்.

''ஐயோ! அவரிடம் நான் அனுபவிக்கும் துன்பம் கொஞ்ச நஞ்சமல்ல. என்னைப் போல் யாருமே துன்பப்பட்டிருக்க மாட்டார்கள். எனக்கு அன்பு, காதல் என்பது என்னவென்றே தெரியாது — உங்களைச் சந்திக்கும் வரையில்!'' என்றாள்.

''ஆகா! என் அன்பே!'' என்று அவளை மிஸ்டர் ஸ்மித் அணைத்துக் கொண்டார். லிஃப்ட் மேலே போய்க் கொண்டிருந்தது.

அவர் அணைப்பிலிருந்து விடுபட்டு, அவள் மூச்சு விட ஆரம்பித்த பின், ''உங்களுடன் அமர்ந்து வான மண்டலத்து நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டே கனவுலகில் சஞ்சரிக்கையில்... ஆகா! என்ன இன்பமாக இருந்தது. இந்த அனுபவத்தை என்றும் மறக்க மாட்டேன். ஆனால் இந்த அரவிட் இருக்கிறாரே, என் கணவர், அவர் சற்றும் உபயோகமில்லாத மனிதர். ஓர் உணர்ச்சியும் கிடையாது. கொஞ்சமும் கவிதை என்பது அவர் உள்ளத்தில் கிடையாது. வெறும் ஜடம்!'' என்றாள்.

''கண்ணே! நீ சொல்வதைக் கேட்க மிகவும் வேதனையாயிருக்கிறது!'' என்றார் ஸ்மித்.

''என் வேதனையை நீங்கள் உணருகிறீர்கள் இல்லையா? அதைப் பற்றியெல்லாம் நாம் இப்பொழுது நினைக்க வேண்டாம். நாம் உல்லாசமாகப் பொழுதுபோக்க வந்திருக்கிறோம். நீங்கள் என்னை உண்மையாகக் காதலிக்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

''நிச்சயமாகக் காதலிக்கிறேன்'' என்று கொஞ்சியபடி கூறினார் ஸ்மித். அவளுக்கு வெட்கமாகப் போய் விட்டது. அவரை அணைத்தபடி கண்களை மூடினாள். லிஃப்ட் கீழே போய்க் கொண்டிருந்தது.

கடைசியாக ஸ்மித் எழுந்து நின்றார். அவர் முகம் வெளிறியது. ''லிஃப்டுக்கு என்ன ஆயிற்று? ஏன் நிற்கவில்லை? நாம் இதில் உட்கார்ந்து ரொம்ப நேரமாகப் பேசிக் கொண்டிருக்கிறோம் இல்லையா?'' என்றார் வியப்புடன்.

மிஸ்டர் ஸ்மித் கம்பிக் கதவின் வழியாக வெளியே பார்த்தார். ஒரே இருள். லிப்ட் கீழே கீழே போய்க் கொண்டிருந்தது.

''கடவுளே! இது என்ன அதள பாதாளத்தில் விழுவது போல் அல்லவா போய்க்கொண்டிருக்கிறது! இப்படி எத்தனை நாழிகைப் போய்க் கொண்டிருப்போம் என்பது கடவுளுக்குத்தான் தெரியும் போலும்!''

இருவரும் கீழே பார்க்க முயன்றனர். அங்கே ஒரே இருட்டு. அந்த இருட்டுக் கசத்துக்குள் போய்க் கொண்டே இருந்தனர்.

''நரகத்துக்குப் போகிறோம்போல் தோன்றுகிறது!'' என்றார் ஸ்மித்.

''அன்பே! எனக்குப் பயமாக இருக்கிறதே! ஆபத்துக் காலப் பிரேக்கை இழுத்து லிஃப்ட் கீழே போவதை நிறுத்துங்கள்'' என்றாள்.

ஸ்மித் தம்மால் இயன்றமட்டும் இழுத்து நிறுத்தப் பார்த்தார். நின்றால்தானே! அது பாட்டுக்குக் கீழே கீழே போய்க் கொண்டே இருந்தது.

''எனக்குப் பயமாக இருக்கிறது! என்ன செய்யப் போகிறோம்!'' என்று நடுங்கிய வண்ணம் கேட்டாள் அந்தப் பூங்கொடியாள். அழத் தொடங்கி விட்டாள்.

''கண்ணே! அழாதே; அழாதே! புத்திசாலித்தனமாக நடந்து கொள்ள வேண்டும். நம்மால் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. நாம் இருவரும் பக்கத்தில் நெருங்கி அமைதியாக உட்காருவோம். என்ன நடக்கிறது என்று பார்ப்போம். எப்பொழுதாவது ஒரு சமயம் லிஃப்ட் நின்றே ஆக வேண்டும். அதுவரையில் பொறுத்திருப்போம்!'' என்றார் ஸ்மித்.

இருவரும் ஒருவரை யொருவர் அணைத்துக் கொண்டு நெருங்கி அமர்ந்து கொண்டனர். லிஃப்ட் இறங்கிக் கொண்டே இருந்தது.

''நாம் சந்தோஷமாகப் பொழுது போக்க நினைத்தபோது இப்படி ஒரு விபரீதம் நிகழ்கிறதே!'' என்றாள் அவள்.

''எல்லாம் சைத்தானின் வேலை'' என்றார் ஸ்மித்.

கடைசியில் திடீரென்று லிஃப்ட் நின்றது. எங்கு பார்த்தாலும் ஒரே வெளிச்சம். கண்கள் கூசின. அவர்கள் நரகத்துக்கு வந்து சேர்ந்திருந்தார்கள். சைத்தான் மரியாதையுடன் லிஃப்டின் கதவைத் திறந்து விட்டான்.

''வாருங்கள், உங்கள் வரவு நல்வரவாகுக!'' என்று சைத்தான் வணங்கி அவர்களை வரவேற்றான். அவன் மிக நாகரிகமாக உடை அணிந்திருந்தான்.

ஸ்மித்தும் அவர் காதலியும் பிரமை பிடித்தாற்போல் வெளியே வந்தனர். ''தெய்வமே! நாங்கள் எங்கே இருக்கிறோம்?'' என்று இருவருமே கேட்டனர். சைத்தான் இதைக் கேட்டுச் சிறிது அதிர்ச்சியுற்றாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், ''நீங்கள் நினைப்பதுபோல் நரகம் அவ்வளவு மோசமான இடமல்ல. இங்கே உங்கள் வாசம் இன்பகரமாகவே இருக்கும் என்று நினைக்கிறோம். நீங்கள் இந்த ஓர் இரவு மட்டும்தானே தங்க விரும்புகிறீர்கள்?'' என்றான்.

''ஆமாம்; ஆமாம். இன்றிரவு மட்டும் தான். நிரந்தரமாய் இங்கே தங்கப் போவதில்லை; இல்லவே இல்லை!'' என்று சற்றுப் பதற்றத்துடன் கூறினார் ஸ்மித்.

அந்த இளமங்கை நடுங்கிக் கொண்டே அவர் கைகளைப் பற்றிக் கொண்டாள். அங்கிருந்த மங்கிய வெளிச்சத்துக்குக் கண்கள் பழக்கப்பட்டதும் தாங்கள் ஒரு சதுரமான முற்றத்தில் நிற்பதையும் அவர்களைச் சுற்றி வீடுகள் இருப்பதையும் கண்டனர். வீடுகளின் வாசலில் திரை மூடியிருந்தாலும் உள்ளே ஏதோ எரிந்து கொண்டிருந்தது.

சைத்தான், ''ஒருவரையொருவர் காதலிக்கும் காதலர்கள் நீங்கள்தானா?'' என்று கேட்டான்.

''ஆம்; காதல் வெறி பிடித்தவர்கள்!'' என்று பதில் சொன்னாள் நங்கை.

''அப்படியானால் இந்த வழியாக வாருங்கள்'' என்று அழைத்துச் சென்றான் சைத்தான். அந்தப் பெரிய சதுர முற்றத்தை விட்டு, மெள்ள இருண்ட சந்தில் அழைத்துப் போனான். அங்கே ஓர் எண்ணெய்க் கறை படிந்த கதவுடன் கூடிய ஒரு பழைய வீட்டின் முகப்பில் விரிந்த கண்ணாடி கொண்ட அரிக்கேன் விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

''இங்குதான் நீங்கள் தங்க வேண்டும்'' என்று சொல்லிக் கதவைத் திறந்துவிட்டுச் சைத்தான் நாசூக்காக நழுவிக் கொண்டான்.

அவர்கள் உள்ளே நுழைந்தார்கள். அங்கே ஒரு புதுப் பெண் சைத்தான் கோரமான உருவத்துடன் தலையில் கொம்புகளுடன் அவர்களை வரவேற்றுப் புன்முறுவல் காட்டியது. அதற்கு எல்லாமே தெரியும் போலும்!

அது சுமாரான பெரிய அறை. நடுவில் ஒரு மேஜை இருந்தது. அதன் மேல் அழுக்குப் படிந்த துணி. சுவரை யொட்டி ஒரு படுக்கை. அழுக்கும் நாற்றமும்தான். எனினும் அவர்களுக்கு அந்த அறை மிக நேர்த்தியான அறையாகத்தான் தோன்றியது. இருவரும் கொஞ்சிக் குலாவத் தொடங்கி விட்டனர்.

இன்னொரு கதவு வழியாக ஒரு மனிதன் சத்தப்படுத்தாமல் வந்தான். அவன் பார்ப்பதற்கு ஹோட்டல் சர்வர் மாதிரி தோன்றினான். அவன் உடை மிக நேர்த்தியாக இருந்தது. அந்த மங்கிய ஒளியில் அவன் அணிந்திருந்த வெள்ளைச் சட்டை பளிச்சென்று தெரிந்தது. அவன் அமைதியாக நடந்தான். அவன் பாதங்கள் எவ்வித சத்தமும் எழுப்பவில்லை. அவன் காரியங்கள் யாவும் முடுக்கி விட்ட இயந்திர பாவனையில் நிகழ்ந்தன. அவன் முகம் கடுகடுப்பாக இருந்தது; பார்வை எங்கோ நெடுந் தூரத்தில் குறியிட்டு நின்றது. முகம் சவக் களையாக வெளிறியிருந்தது. அவன் நெற்றிப் பொட்டில் குண்டுபட்ட வடு இருந்தது. அவன் அறையைச் சுத்தம் செய்தான். மேஜையின் மீது விரிக்கப்பட்டிருந்த துணியின் அழுக்கைத் துடைத்தான்.



## கோ-ஆப்டெக்ஸில் உங்கள் பணத்தின் மதிப்பு உயருகிறது!

**10%** விசேட தள்ளுபடி

### கோ-ஆப்டெக்ஸ்



கைத்தறி ஆடைகள்
கைத்தறியே வண்ணத்துப் பூச்சி!

புகழ் பெற்ற காஞ்சிபுரம், ஆரணி மற்றும் கும்பகோணம் பட்டுப் புடவைகள், பகட்டான பருத்திப் புடவைகள், வேட்டிகள், லுங்கிகள், கிளாசிக் ஷர்ட்டுகள், மற்றும் வீட்டு அலங்காரத் துணி வகைகள், துண்டுகள்.

இந்த பண்டிகைக்கு வண்ணத்துப் பூச்சியின் 10% விசேட தள்ளுபடி உண்டு.
(தள்ளுபடியை தமிழ் நாடு அரசு ஏற்றுக்கொள்கிறது.)

**25-9-'73 முதல் 29-10-'73 வரையில்.**

Criterion CO 2983 TM B

**11-10-73 முதல் 25-10-73 வரை பம்பாய் ஆஸ்திக சமாஜத்தில் (மாதுங்கா) நடைபெறும், கோ-ஆப்டெக்ஸ் பட்டுப்புடவைகளின் கண்காட்சிக்கு விஜயம் செய்யுங்கள்**

தண்ணீர் பேஸினைக் கொண்டு வந்து வைத்தான்.

அவர்கள் தங்கள் காதல் கேளிக்கையில் மூழ்கியிருந்ததால் அவனைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவன் தன் வேலையை முடித்துக் கொண்டு அந்த அறையை விட்டுப் போக யத்தனித்தபோது, ஸ்மித், "கொஞ்சம் பானம் கொண்டுவா, அப்பா!" என்றார்.

மிஸ்டர் ஸ்மித்தும் அவர் காதலியும் மீண்டும் காதல் கேளிக்கைகளில் ஈடுபட்டனர்.

அந்தச் சமயத்தில் மீண்டும் அந்த மனிதன் மதுபானம் நிறைந்த ஜாடியையும் கோப்பைகளையும் ஏந்திக் கொண்டு சத்தமின்றி வந்தான். கோப்பைகளை மேஜையின்மீது வைத்து விட்டு, ஜாடியிலிருந்த பானத்தைக் குனிந்து கோப்பைகளில் விட்டான். அப்போது மேஜையின்மீதிருந்த மங்கிய விளக்கின் ஒளி அவன் முகத்தில் பட்டது. முகம் எப்போதும் போல் இருந்தது. ஆனால் நெற்றிப் பொட்டில் குண்டு பட்ட இடம் குழியாகத் தெரிந்தது. அதை ஸ்மித்தின் காதலி பார்த்ததும் ஸ்மித்தின் மடியிலிருந்து துள்ளி எழுந்தாள். "ஓ! கடவுளே, அரவிட்! நீங்களா? நீங்கள்தானா? ஹா! நீங்கள் இறந்து விட்டீர்களா? உங்களை நீங்களே சுட்டுக் கொண்டு இறந்து விட்டீர்களா?"

அம்மனிதன் ஆடாமல் அசையாமல் சிலை போல் நின்றான். அவன் முகத்தில் ஒரு வேதனைக் குறியுமில்லை. எப்பொழுதும்போல் கடுமையாகவே இருந்தது.

"அரவிட்! என்ன காரியம் செய்துவிட்டீர்கள்? நீங்கள் இதை எப்படிச் செய்யலாம்? நீங்கள் இப்படிச் செய்வீர்கள் என்று கடுகத்தனை சந்தேகமாவது எனக்கு இருந்திருந்தால் நான் வெளியே வந்தே இருக்க மாட்டேனே! நீங்கள் எப்பவும் என்னிடம் எதுவுமே சொல்வதில்லை. நீங்கள் சொல்லாதபோது எனக்கு எப்படித் தெரியும்? ஓ! கடவுளே...!" என்று குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

அந்த மனிதன் அவளை வேற்று மனிதனைப் பார்ப்பது போல் பார்த்தான். நெற்றிப் பொட்டிலிருந்து இரத்தம் கசியவில்லை. ஒரு துளைதான் தெரிந்தது.

"ஆ! இது பயங்கரம்! பயங்கரம்! என்னால் இங்கிருக்க முடியாது! இப்போதே இதை விட்டுப் போய்விடுவோம்! என்னால் தாங்க முடியாது!" என்றாள் அந்தப் பெண்.

அவன் தன் மேல் கோட்டையும் தொப்பியையும் எடுத்துக் கொண்டான். மாடிப் படிகளைத் தபதபவென்று வேகமாகக் கடந்து கீழே வந்தான். ஸ்மித்தும் வேகமாக அவளைத் தொடர்ந்தார். அப்படி இறங்கியபோது அவன் கால் வழுக்கி விட்டது. சரிந்து வந்து கீழே உட்கார்ந்தாள். கீழே இருந்த பெண் சைத்தான் இவர்களைப் பார்த்துப் பொருள் பொதிந்த புன்னகை புரிந்தது. அதற்குத்தான் எல்லாம் தெரியுமே!

அவர்கள் தெருவுக்கு வந்தபோது சிறிது அமைதியுற்றனர். அந்த நங்கை ஆடைகளைச் சரி செய்து கொண்டாள். முகத்துக்குப் பவுடர் போட்டுக் கொண்டாள். ஸ்மித் அவளை ஆதரவுடன் அணைத்துக் கொண்டார். அவள் கண்களில் கோத்து நின்ற கண்ணீர்த் துளிகளை. மிகவும் ஆதரவாகத் துடைத்தார்



## அடடா, என்ன முன்னேற்றம்!

லண்டனிலிருந்து பெர்த் நகருக்கு ரயிலில் போகும்போது பாப் பாடகர்கள் நேரில் பாடிப் பிரயாணிகளை மகிழ்விக்கிறார்கள். ஸ்வீடன் நாட்டில் குழந்தைகளுக்குப் பால் கலக்க வசதியாக ரயிலில் ஹீட்டர்கள் இருக்கின்றன. குழந்தைகள் விளையாட ரயிலில் தனி இடம் உண்டு.

ஜப்பானில் ரயிலில் உடம்பு மாஸேஜ் செய்ய தனி அறைகள் ஏற்படுத்தப் போகிறார்கள்.

ஜெர்மனியில் ஓடும் ரயிலிலிருந்து வீட்டுக்கு டெலிபோன் செய்யலாம். பாரிஸில் ஓடும் ரயிலில் கடை வைத்திருக்கிறார்கள்.

நமது நாட்டில்?

மூன்றாவது வகுப்பின் பெயரை 'இரண்டாவது வகுப்பு' என்று மாற்றப் போகிறார்கள்!

-விக்கெண்ட்-பாலி

ஸ்மித். அவ்வளவு நல்ல மனிதர். அவர்கள் சதுர முற்றத்தை அடைந்தார்கள்.

அங்கே தலைமைச் சைத்தான் உலாவிக் கொண்டிருந்தான். அவன் மீது இவர்கள் மோதிக் கொண்டனர். "நீங்கள் வெகு சீக்கிரம் வந்து விட்டீர்களே! எல்லாம் உங்களுக்குச் சௌகரியமாக இருந்ததல்லவா?" என்று சைத்தான் கேட்டான்.

"ஓ! மிக பயங்கரமாக இருந்தது!" என்று அந்த மங்கை சட்டென்று பதில் சொன்னாள்.

"அப்படிச் சொல்லாதீர்கள். அப்படி நினைக்காதீர்கள். பழைய நாட்களில் நீங்கள் இங்கே வந்திருக்க வேண்டும். அப்போதைக்கும் இப்போதைக்கும் எவ்வளவு வித்தியாசம் தெரியுமா? இப்பொழுது நரகத்தில் குறை சொல்வதற்கே ஒன்றும் கிடையாது. இப்பொழுதெல்லாம் நாங்கள் மிகத் தெளிவாகப் புரியும்படி செய்கிறோம். ஏன்; மகிழ்ந்து அனுபவிக்கும்படி செய்கிறோம்!" என்றான்.

மிஸ்டர் ஸ்மித், "உண்மை; முன்னைவிட இப்போது சிறிது மனிதாபிமானத்தோடு காரியங்கள் நடைபெறுகின்றன!" என்றார்.

"நாங்கள் எல்லாவற்றையும் நவநாகரிகமாக்கி விட்டோம். மாற்றி யமைத்து விட்டோம்!" என்றான் சைத்தான்.

"நீங்களும் காலத்தோடு ஒட்டிப் போக வேண்டுமல்லவா?" என்றார் ஸ்மித்.

"வாஸ்தவம். இப்பொழுதெல்லாம் உள்ளம்தான் துன்பப்படுகிறது! உடலை வருத்துவதில்லை" என்றான் சைத்தான்.

"அதற்குக் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும்!" என்றாள் அழகி.

சைத்தான் மரியாதையுடன் லிஃப்ட்டுக்கு அழைத்துச் சென்றான் அவர்களை. "வணக்கம். மீண்டும் வருக" என்று சொல்லி லிஃப்டின் கதவுகளை மூடினான். லிஃப்ட் மேலே சென்றது.

"அப்பாடா! எல்லாம் முடிந்தது" என்று இருவரும் சேர்ந்து கூறினர். அவர்களுக்கு அப்படியொரு நிம்மதி ஏற்பட்டது. 'லிஃப்ட்' மேலே மேலே சென்று கொண்டிருந்தது.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்:

எஸ். வி. எஸ்

# நாளும் உங்கள் உடலுக்குத் தேவை 23 அத்தியாவசியமான ஊட்டச் சத்துக்கள்.

இதர உணவுப் பானங்கள் இவற்றிலே எத்தனை தருகிறது என்று பாருங்கள்!

## காம்ப்ளான் 23 ஊட்டச் சத்துக்களையும் தருகிறது.

குறிப்பைப் படியுங்கள்.

**புரதம்**
திசுக்களையும் செல்களையும் உருவாக்க, பாதுகாக்க

**லிப்பிடுகள்**
பொங்கிப் பெருகும் சக்திக்கே.

**கார்போஹைடிரேட்**
சக்தி மிகுந்த உடல் வலிமைக்கே.

**கால்ஷியம்**
ஆரோக்கியமான பற்கள், எலும்புகளுக்கு

**பாஸ்பரஸ்**
உடல் சுரப்பிகள், பற்கள், எலும்புகளுக்கு

**சோடியம்**
இரத்தம் நல்முறையில் செயலாற்ற.

**குளோரைடு (Cl வடிவில்)**
தசை இயக்கத்திற்கு. பிடிப்புக்களைத் தவிர்க்கும்.

**பொட்டாஷியம்**
மனத் தளர்ச்சி, தசை அயர்ச்சி எதிராகப் போராட.

**இரும்புச் சத்து**
ஆரோக்கியமான இரத்தத்திற்கே

**அயோடின்**
தைராய்டு சுரப்பி நலமாக இயங்க.

**வைட்டமின் ஏ**
ஆரோக்கியமான கண்களுக்கு.

**வைட்டமின் பி1**
வளர்ச்சி, உறுதியான நரம்புகள்; 'பெரி-பெரி' நோய் பிடிக்காதிருக்க.



**ரிபோஃப்ளேவின்**
ஆரோக்கியமான வாய், நாக்கு, உதடுகள், கண்களுக்கு.

**நிக்கோடினமைடு**
ஒளிவீசும் ஆரோக்கியமான சருமத்திற்கே.

**கால்ஷியம் பெண்டோதெனேட்**
நரம்புகளையும் தசைகளையும் வலுப்படுத்த

**கோலின்**
கல்லீரல் ஆரோக்கியமாக இயங்க.

**பைரிடாக்ஸின் (B6)**
தசைகளை இளைப்பாற்ற

**வைட்டமின் பி12**
இரத்த சோகை பிடிக்காதிருக்க.

**ஃபாலிக் அமிலம்**
புதிய இரத்த செல்களை உருவாக்க உறுதுணை.

**வைட்டமின் சி**
நோயெதிர்ப்புச் சக்தியைப் பெருக்கி, ஸ்கர்வி நோய் வராதிருக்க.

**வைட்டமின் டி**
உறுதியான பற்கள், எலும்புகளுக்கு.

**வைட்டமின் ஈ**
கரு வளர்ச்சிக்கு.

**வைட்டமின் கே**
இரத்தம் இயற்கையான முறையில் உறைய உதவும்.

**இதர சிறுசிறு பொருட்கள்**
வைட்டமின்களை உடல் உறிஞ்சிக் கொள்ளவும் சுரப்பிகள் நன்கு இயங்கவும் உதவும்.

உலகெங்கும்காம்ப்ளான் பருகும் இலட்சக்கணக்கானோரில் வளரும் குழந்தைகள் உண்டு. சுறுசுறுப்பான இளைஞர்கள், பரபரப்புடன் இயங்கும் அலுவலர்கள், கருத்தரித்த தாய்மார்கள், பாலூட்டும் அன்னையர், வயது முதிர்ந்தோர், விளையாட்டு வீரர்கள், பருமன் குறைப்போர் எனப் பலப்பல வகையினர் உண்டு. எளிதில் ஜீரணிக்கக் கூடிய காம்ப்ளான், டாக்டர்கள் சிபாரிசு செய்வது. வயிற்றுப்புண், வயிற்றுப் போக்கு, இரத்தபேதி, ஃப்ளூ ஜுரம், பல்நோய் உள்ளவர்கள் கூட ஜீரணிக்கத் தக்கது. ஆரோக்கியமான சுவைமிகு பானம் தயாரிக்க, டப்பாவின் மீதுள்ள குறிப்பைப் பின்பற்றவும்.

பருகுவீர் **காம்ப்ளான்®**

பரிபூரண உணவு
போஷாக்குப் பற்றுக்குறையிலிருந்து
பாதுகாக்கவே.

உலகெங்கும் உபயோகிக்கப் படுவது—
**க்ளாக்ஸோ**
ஆராய்ச்சியில் உருவானது.

# குளம் கட்டிய கண்ணீர்

ஹங்கேரியக் கதை

சந்தேகம் இல்லை; ஐயம் ஒரு பேய்தான்! அது பிடித்துக் கொண்டு விட்டால், மனிதன் தன் சுய புத்தியை இழந்து விடுவான் தான்! தீர விசாரித்துச் செயற்படும் அறிவை இழந்து ஒரு காரியத்தைச் செய்தபின் வருந்தி என்ன பயன்? - இந்தக் கருத்தைச் சித்திரிக்கும் ஹங்கேரியக் கதையின் ஆசிரியர் பெயர் என்ன என்று தெரியவில்லை. இருந்தாலும் எழுதும் முறையால் தமக்கு ஒரு பெயர் சம்பாதித்துக்கொண்டுள்ளவர் என்று மட்டும் ஐயந்திரிபற்ற உறுதி.

**பொ**ழுது படிந்த மாலை நேரம். காற்று வீசிக் கொண்டிருந்தது. டாக்டரின் மனத்தில் பல் வகை எண்ணங்கள் அலையெனப் புரண்டு கொண்டிருந்தன. பற்றற்ற உணர்வோடு தம் பணியைத் தொடங்க வேண்டும் என்றுதான் அவர் முயன்று கொண்டிருந்தார். ஆனால் அவரையும் மீறி அவர் உள்ளத்தில் அந்த நோயாளி புகுந்து சிந்தனையைக் கிளறிவிட்டு வேடிக்கை பார்த்தான். அவன் வலது கையில் அதென்ன கோளாறு? பொறுக்க முடியாத வேதனையிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்பதற்காக அவன் அடிக்கடி கையைக் கிழித்துக்கொண்டு வந்து நிற்கிறானே!

அன்றும் டாக்டரைக் காண அந்த நோயாளி வந்து சேர்ந்தான். நோயாளிக்கு நம்பிக்கையே போய் விட்டாற்போலிருந்தது. இயற்கைச் சூழலும் அவனுக்கு விபரீதமாக அமைந்திருந்தது; ஆறுதல் அளிக்கக் கூடியதாயில்லை. ஆயினும் அவன் எப்படியோ டாக்டரின் வீட்டை அடைந்தான். வாசலில் காவலுக்கு அமர்ந்திருந்த வேலையாள் அவனைத் தடுத்து நிறுத்த முயன்றான். ஆனால் நொந்து போன அவன் உணர்வுகளைப் படித்த அவன், அவனைத் தடுக்க முடியாமல் தவித்து நின்றான்.

அவனைப் பார்த்ததும் டாக்டர், ''உனது உடல்நிலை இப்பொழுது எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார்.

''என்ன செய்வேன் டாக்டர்? ஏறக் குறைய நான் ஒரு வாரமாக உறங்கவே இல்லை. என் வலது கையில் முன்போலவே பொறுக்க முடியாத வலி கண்டிருக்கிறது. இந்தக் கைக்குள் அப்படி வலிக்க என்ன இருக்கும் என்றே விளங்கவில்லை. புற்று நோயாக அல்லது அதைக் காட்டிலும் பயங்கரமான வேறு ஏதாவது நோயாக இருக்கலாமோ என்று தோன்றுகிறது. அறுபது நாழிகையும் தணலை வைத்துக் கட்டினாற் போன்ற எரிச்சல்! ஒரு கணம்கூட நான் உயிர் வாழ விரும்பவில்லை. நான் இந்த நகரத்துக்கு வந்ததே உங்களிடம் சிகிச்சை பெறத்தான். வேண்டுமானால் என் இந்தக் கையை வெட்டி விறகாக்கி எரித்து விடுங்கள். இந்த வேதனையிலிருந்து நான் விடுபட நீங்கள் எது செய்தாலும் எனக்குச் சம்மதமே. எப்படியாவது வேதனை தீர்ந்தால் சரி'' இதைக் கூறும் பொழுது அவன் கண்களில் நீர் பொங்கி வழிந்தது.

டாக்டர் மீண்டும் அவன் கையைப் பரிசோதித்தார். ஆயினும் அவரால் எந்த முடிவுக்கும் வரமுடியவில்லை. நோயாளியைப் போன்றே டாக்டரின் உள்ளமும் அவன் வேதனையை உணர முடியாமல் அழுதது. அதனால் அவர் நெற்றியில் வியர்வைத் துளிகள் பனித்து முத்திட்டுத் தோன்றின. ஆயினும் நோயாளிக்கு ஆறுதல் சொல்லும் முயற்சியில், ''இதற்கு அறுவைச் சிகிச்சை தேவையில்லை என்றே எனக்குப் படுகிறது. பரிசோதித்துப் பார்க்கவும் ஒரு முடிவுக்கு வரவும் எனக்கு இன்னும் சிறிது அவகாசம் கொடு. நம்பிக்கை இழக்காதே. குணமாகி விடும்!'' என்றார்.

ஆனால் நோயாளியோ அடிக்கடி 'கிழித்துப் போடுங்கள், டாக்டர்! கிழித்துப் போடுங்கள்' என்றே சொல்லிக் கொண்டிருந்தான். அறுவை இல்லாமல் இதற்குச் சிகிச்சையே கிடையாது என்பது போன்ற எண்ணம் அவன் உள்ளத்தில் வேரூன்றி விட்டது. டாக்டர் 'அவகாசம் கொடு' என்று சொல்லவே, பொறுமை இழந்து அவனே தன் கையைக் கீறிக் கொண்டு விட்டான். டாக்டர் அவனை அதட்டித் தடுத்தார். அறுத்துக் கொண்ட இடத்தை மருந்து போட்டுக் கட்டி விட்டார்.

**ப**ல மாதங்கள் ஓடிவிட்டன. ஆனால் அந்த நோயாளி வரவில்லை. டாக்டரோ அவனை எந்த நிமிஷமும் எதிர்பார்த்தார். அவன் நினைவு அவருக்கு எந்த நாளும் மறந்ததே இல்லை.

ஒரு நாள் டாக்டர் காலைச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு எழுந்தபோது வேலையாள் அவர் கையில் ஓர் உறையைக் கொடுத்தான். அத்தனை பெரிய உறையைப் பார்த்த டாக்டர் வியப்போடு பிரித்தார். முழுசாக மூன்று பக்கங்கள் நீண்டிருந்தது அந்தக் கடிதம். பற்றாக் குறைக்கு அதன் ஆரம்பமும் வியப்பை வளர்ப்பதாக இருந்தது. அதில் எழுதியிருந்தது:

''டாக்டர் சார்! வணக்கம். தங்களுக்கு வெகு நாட்கள் நான் துன்பம் தந்துவிட்டேன். அதற்காக மன்னிப்புக் கோருகிறேன். நான் ஒரு செல்வந்தன். என் தந்தையுமே பெரும் செல்வந்தர். அவருடைய ஆதரவிலும் பலத்திலும்தான் நான் மாபெரும் சொத்துக்கு

உரிமையாளனாக ஆக முடிந்தது. எத்தனையோ தொழிற்சாலைகள் எனக்குச்சொந்தமாக இருந்தன. ஆரம்பத்தில் என் வாழ்க்கை செல்வச் சீமான்களுக்கே உரிய பண போதையில் மிதந்தது. எப்படி யெல்லாமோ இன்பம் காண முயன்றேன். பிறகு நல்ல நண்பர்களின் நற்போதனையினால் மனம் திருந்தி நல்லொழுக்க முடைய அழகி ஒருத்தியை மணந்தேன். மூன்று வருஷ இல்லற வாழ்க்கையில் 'இல்லற மல்லது நல்லறமன்று' என்பதைக் கண்கூடாகக் கண்டேன். திருமணத்தில் உள்ள மணத்தை நுகர்ந்து, அதன் சிறப்பை உணர்ந்தேன். மனித வாழ்வில் திருமணம் அவசியம். அதைக் காட்டிலும் சிறந்த உறவு கிடையாது என்பதையும் கண்டேன். மனைவியின் எல்லை இல்லாத அன்பில் முக்குளித்து எழுந்தவனுக்கு இன்பத்தின் எல்லையைக் கண்டாற் போன்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. காலையிலிருந்து மாலை வரையில் தொழிற்சாலை வேலைகளில் ஈடுபட்டிருப்பேன். உழைப்பில் உயர்ந்து நின்ற களைப்போடு வீடு திரும்புவேன். மனைவியின் முறுவல் முகமன் கூறி வரவேற்கும். அத்தனை களைப்பும் அந்த முறுவலைக் கண்டதும் பனியாக மறைந்து விடும். களைப்பு களிப்பாக மாறி இன்பம் தரும்.

எனது இந்த மகிழ்ச்சியைக் காண விதிக்கே பொறுக்கவில்லை போலும்!

ஒரு நாள் நான் தொழிற்சாலையிலிருந்து நண்பகலில் சிறிது சீக்கிரமாகவே வீடு திரும்பினேன். என் மனைவியை வீட்டில் காணாமல் வேலைக்காரனைக் கேட்டேன். எங்கோ வெளியில் போயிருப்பதாகக் கூறினான்.

அவள் எங்கே போயிருப்பாள்? உள்ளத்தில் இந்தக் கேள்வி கள்ளமாகப் புகுந்துவிடவே, மறுநாளும் அலுவலகத்தில் இருப்புக் கொள்ளாமல் சீக்கிரமாகவே வீடு திரும்பினேன். அன்றும் என் மனைவியை வீட்டில் காணவில்லை. எனது ஐயம் வேர் விடத் தொடங்கவே, வேலைக்காரனைக் கூப்பிட்டு, ''ஏன் அப்பா! எஜமானியம்மா தினமும் இந்த நேரத்திலே எங்கேயாவது வெளியே போகிறார்களா?'' என்று கேட்டேன்.

''ஆமாங்க எசமான்!''

''எப்போ திரும்பறாங்க?''

''நீங்க அலுவலகத்திலிருந்து வர்றத்துக்கு முன்னாலே.''

''ஆமாம்... சரி, நீ போ. உன் வேலையைப் பாரு! எசமானியம்மாள் கிட்ட நான் வந்தது, போனது, பேசினது எல்லாத்தையும் காட்டிக்காதே!''



## பல்கேரியக் கதை

நியாயமும் அநியாயமும் ஒரு முறை உணவு விடுதிக்குச் சென்றன. வயிறு நிரம்ப வாங்கு வேண்டியதை யெல்லாம் வாங்கிச் சாப்பிட்டன. அவை எழுந்து வெளியே போக முயன்றபோது உணவு விடுதி முதலாளி, "ஐயா! தயவுசெய்து நீங்கள் சாப்பிட்டதற்கான பில் பணத்தைக் கொடுத்து விட்டுப் போகிறீர்களா?" என்று மரியாதையாகக் கேட்டான்.

அநியாயம் அவனை எரித்து விடுவதைப் போல வெறித்துப் பார்த்து, கோபம் கொதிக்க, "என்ன பிதற்றுகிறாய்? நாங்கள் பில்லுக்குப் பணம் தரவில்லையா? நன்றாக இருக்கிறதே, நீ சொல்வது? எவன் ஐயா ஒரு தரத்துக்கு இரண்டு தரமாகப் பணம் தருவான்?" என்று சீறியது.

அதன் போக்கு கூற்றைக் கேட்டு முதலாளி அயர்ந்து விட்டான். இருந்தாலும் சாந்தமாக, "ஐயா! மறந்து பேசுகிறீர்கள்! நீங்கள் இன்னும் பணம் தரவில்லை!" என்றான்.

"உளறாதே! நான் காசு கொடுத்தேன். அதுவும் உன்னிடமே கொடுத்தேன்!" என்று அடித்துக் கூறியது அநியாயம்.

அதற்கு மேல் அதனிடம் பேசுவதில் பயன் இல்லை என்று எண்ணிய ஹோட்டல் முதலாளி அருகிலேயே அத்தனையையும் கேட்டவாறு பேசாமல் நின்று கொண்டிருந்த நியாயத்தைப் பார்த்து, "ஐயா! நியாயவானே! நீங்கள் நியாயம் சொல்லுங்கள் ஐயா! பேசாமல் நிற்கிறீர்களே!" என்றான்.

"நான் என்னத்தைச் சொல்கிறது? எனக்கு எதற்கு வீண் வம்பு? நான் சாப்பிட்டது அநியாயத்தோடு. எனக்கு விருந்து வைத்தவரே அவர். அவரைப் பகைத்துக் கொள்ளச் சொல்கிறாயா?" என்று நியாயம் மெதுவான குரலில் கமறியது. - ஆசிரியர்: ரேலின் பேலின்

இட்டத்தட்ட ஐந்து மணிக்கு என் மனைவி வீடு திரும்பினாள். என்னைக் கண்டதும் ஆர்வம் பொங்க ஓடிவந்து அணைத்துக் கொண்டாள். எப்பொழுதும் போல் தன் அன்பைப் பொழிந்தாள். என் உலர்ந்த மனம் மலர்ந்தது. ஆனால் என் உள்ளத்தில் புகுந்த கள்ளனுக்குத்தான் நிம்மதியே ஏற்படவில்லை. ஐயம் வேர் விட்டு, ஆலாகத் தழைத்து விடவே, மனம் இல்லாதது பொல்லாதது எல்லாம் எண்ணலாயிற்று.

பெண் என்பவள் பல வேஷதாரி. பகல் வேஷக்காரர்கள் ஒருசில வேஷங்கள் போட்டு நடிப்பார்கள். நாளடைவில் அந்த வேஷம் அவர்களுக்கு அலுத்துச் சலித்துப் போகக் கூடும். ஆனால் பெண்? உள்ளொன்று வைத்துப் புறமொன்று காட்டி நடிப்பதில் பலே கைகாரி. அவள் காட்டும் வண்ண ஜால வேஷங்களை விளங்கிக் கொள்ள முடியவே முடியாது.

பெண் படுமோசக்காரி. பெண்ணின் மாற்றுப் பெயரே மோசம் என்று கொள்ளலாம்; ஆம்; மோசமேதான்!

அன்றிரவு நான் படுக்கையில் புரண்டு புரண்டு அவளைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தேன். தூக்கமே வரவில்லை. கொஞ்ச நஞ்சம் வந்த தூக்கத்தைக் தெரு நாய்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் குரைத்து விரட்டி விட்டன.

மூன்றாவது நாளும் நான் தொழிற்சாலையிலிருந்து வீட்டுக்குச் சீக்கிரமாகவே திரும்பினேன். நான் நினைத்தாற்போலவே நடந்திருந்தது. என் மனைவி அன்றும் வீட்டில் இல்லை.

நான் அவளுடைய அறையில் உள்ள ஒவ்வொரு பொருளையும் சந்தேகக் கண்கொண்டு நோட்டம் விட்டேன். அவள் எங்கே போகிறாள் என்பதை எப்படியாவது தெரிந்து கொண்டு விட வேண்டும் என்று துடித்தேன். அவளுடையவை என்று சொல்லக் கூடிய ஒவ்வொரு பொருளையும் குடைந்து பார்த்தேன். அவளது தையல் மிஷினிலுள்ள டிராயர் பூட்டுப் போட்டுப் பூட்டியிருந்தது. நான் மறு சாவி போட்டு எப்படியோ அதையும் திறந்து விட்டேன். டிராயருக்குள் பார்த்தால் நாற்பது — ஐம்பது கடிதங்கள் சிவப்பு ரிப்பனால் ஒரு மொத்தமாகக் கட்டி வைக்கப் பட்டிருந்தன. பிரித்துப் பார்வையை ஓட்டினால் அத்தனையும் காதல் கடிதங்கள்! நான் சந்தேகப்பட்டது சந்தேகமல்ல; உறுதி என்பது உறுதியாயிற்று. நான் கடிதங்களைப் பழையபடியே டிராயரில் வைத்துப் பூட்டினேன். எனக்கு மனைவி மீதிருந்த நம்பிக்கை அனைத்தும் போய்விட்டது. அவள் நச்சரவமாகத் தோன்றினாள். என் நம்பிக்கை கனைத் தீண்டி மாய்த்த கருநாகம் அவள் என்ற முடிவுக்கு வந்தேன். நான் அவளுக்கு உகந்த அன்பை அளித்து அவளும் எனக்கு உகந்த அன்பைத் தந்தால் எவ்வளவு உவப்பாயிருக்கும்! அது இந்த வஞ்சகியிடம் ஏது?

இரவு அவள் என் அருகில் படுத்தாள். அதை என்னால் பொறுக்க முடியவில்லை. இரண்டு மணி சுமாருக்கு எழுந்தேன். நிம்மதியாக உறங்கிக்கொண்டிருந்த அவள் கழுத்தில் கைவைத்தேன். இறுகச் இறுக அவள் கழுத்தை அழுத்தினேன். விழிப்புக் கொடுத்த அவள் என்னைக் கண் திறந்து பார்த்தாள். ஒன்றும் கூறாமல் தன் கண்களை மூடிக் கொண்டாள். வெறியில் நான் அவள் கழுத்தை இறுக்கி அழுத்தி விட்டேன். நான் அழுத்திய அழுத்தலில் அவள் வாயிலிருந்து இரத்தம் வந்தது. அது என் வலது கையில் வந்து விழுந்தது. அவள் உயிர் அற்ற சடலமாகக் கிடந்தாள்.

நான் நடுநடுங்கிப் போனேன். பதறிப் போய் வேலைக்காரனுக்குக் குரல் கொடுத்தேன். நான் செய்த முட்டாள்தனத்தை அவனிடம் மறைக்காமல் கூறினேன்.

எசமான விசுவாசமுள்ள அவன், "முதலாளி! நடந்தது நடந்து விட்டது. இந்தச் சடலத்தை இங்கிருந்து எடுத்து வாருங்கள்! அதற்குள் நான் போய் காரேஜிலிருந்து காரை எடுத்து வருகிறேன். இரவுக்கிரவே இதை எரித்து விடுவோம். உங்கள் பெருமையில் மாசு படிய விடக் கூடாது!" என்றான்.

என் உள் உணர்வு என்னை எச்சரிக்கவே, "நான் செய்த தவற்றுக்கு என்னை நேராகப் போலீசில் ஒப்படைப்பதுதான் சரி!" என்றேன் அவனிடம்.

"எசமான்! ஆனாலும் நீங்கள் ரொம்ப சாது. உங்கள் பெருமைக்கு இல்லாவிட்டாலும் உங்கள் அப்பன் — பாட்டன் குலப் பெருமையை நினைத்துப் பாருங்கள்! நல்ல பெயர் எடுப்பது சிரமம், அதைக் கெடுப்பது சுலபம். நிமிஷ வேலை!"

"ஆனாலும்..."



அவள்
எழிலின் ரகசியம்
# ஐடெக்ஸ்
## அழகு சாதனங்கள்

முப்பது வருடங்களாக
பிரசித்திபெற்ற நம்பகமான
தயாரிப்புகள்




**Aravind Laboratories**
MADRAS-33

AL-1

மலேசியா ஏஜண்டு: ஓரியண்டல் ஏஜன்ஸிஸ், 31, மார்க்கெட் ஸ்டிரீட், பினாங்கு

---

புதுமையிலும் புதுமை!

காஞ்சீபுரம், தர்மாவரம், பனாரஸ்,
பட்டுச்சேலை & பாவாடைகளில்

எமது புதிய தயாரிப்புகள்!
நெஞ்சை அள்ளும் நேர்த்தியான புதிய நிறுவுகள்!!



- சந்தோஷ்
- பூர்ணிமா
- கோல்டன் சன்
- பெமினா



மற்றும் கட்டங்கள்
கவர்ச்சிமிக்க
வண்ணங்களில்

# ஸ்ரீ ராஜேஸ்வரி ஹால்

121, ராஜ வீதி கோயமுத்தூர்-1

சார்பு நிறுவனங்கள்:
o கடை வீதி,
சேலம்-1
o காந்தி ரோடு,
காஞ்சீபுரம்-1

தயாரிப்பு நிலையம்: ஸ்ரீ ராஜேஸ்வரி சில்க்ஸ் காஞ்சீபுரம்-1

G.S.R

# சிந்தால் வாக்குறுதி...

மேனியெழிலுக்கு முழுப் பராமரிப்பு

புதுமை குன்றாத நறுமணம்

துர்நாற்றத்திலிருந்து சிறந்த பாதுகாப்பு

**...சிந்தால் மட்டுமே நிறைவேற்றக்கூடியது**




ஜி-11 அடங்கிய ஒரே சோப் சிந்தால். இந்த அற்புத கிருமி நாசினி உடல் துர்நாற்றத்திற்கும் சருமக்கஷ்டத்திற்கும் காரணமாக விளங்கும் கிருமிகளை அழித்து விடுகிறது. இவ்வாறு சிந்தால் உங்கள் மேனியெழிலை அப்பழுக்கின்றி வைத்திருப்பதுடன், உங்களை நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைத்திருக்கிறது.

Interpub/GSC/5/72R Tam

அச்சமிருட்டில் இரவுக்கிரவே என் மனைவி யின் சடலத்தை எரித்து வந்தோம். அதன் பலனாக ரகசியம், ரகசியமாகவே இருந்து விட்டது. யாருக்குமே உண்மை நிலை பற்றி எதுவுமே தெரியவில்லை. மாரடைப்பினால் என் மனைவி மரித்து விட்டதாக ஊரெல்லாம் என் வேலையாள் செய்தியைப் பரப்பிவிட்டான்.

காலப் போக்கில் நினைவுகள் கூட மங்கித் தானே போகின்றன! நாளடைவில் என் செயல்களே எனக்கு மறந்தாற் போல் ஆகி விட்டன. நாம் செய்தது எத்தகைய பாவச் செயல் என்பதையே நான் மறந்து விட்டேன்.

ஒரு நாள் இரவு நான் என் அறையில் அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்த பொழுது வெள்ளையாடை அணிந்த ஒரு மாது என் அறையில் நுழைந்தாள். அவளைக் கண்டதும் நான் விலவிலத்துப் போனேன். இரவு இந்த நேரத்துக்கு அழகில் சிறந்த பெண் ஒருத்தி என் அறைக்கு வருவானேன்? என்னிடம் என்ன வேலை அவளுக்கு?

"உங்களுக்கு என்னைத் தெரியுமா?"

"தெரியாது." நான் குழறினேன்.

"ஆனால் எனக்கு உங்களைத் தெரியும்."

அதைக் கேட்டதும் நான் விதிர் விதிர்த்துப் போய்விட்டேன். வியப்புடன், "அது எப்படி?" என்று கேட்டு வைத்தேன்.

"நான் உங்கள் மனைவியின் தோழி. அக்காள் என்னை உயிருக்குயிராக நேசித்து வந்தாள். அவள் இறந்துவிட்டாள் என்னும் செய்தி கேட்டுத் தாங்கொணாத் துயருற்றேன்!"

அக்காள் உறவு கொண்டாடி அவள் வாயிலிருந்து சொல் வரவே, நான் சிறிது நிம்மதியுற்றேன். அவளை உட்காருமாறு வேண்டினேன். அவள் ஆசனத்தில் அமர்ந்தவண்ணம், "நான் உங்களுக்கு ஒரு சிரமம் தர வந்திருக்கிறேன். எனக்காக நீங்கள் ஒரு காரியம் செய்வீர்களா?" என்று கேட்டாள்.

"தாராளமாக!"

"அக்காள் தையல் இயந்திரத்தில் எனது காதல் கடிதங்களை ஒளித்து வைத்திருக்கிறாள். எனது ஒவ்வொரு கடிதத்திலும் 'நீலம்' என்ற என் பெயர் எழுதப்பட்டிருக்கும். உண்மையில் எனக்குக் கல்யாணமாவதற்கு முன்னால், நான் வேறு ஒருவரைக் காதலித்து வந்தேன். என் காதல் இரகசியம் அம்பலமாகிவிடவே, ஒரே வாரத்தில் என் பெற்றோர் வேறு ஓர் ஆடவனைத் தேடித் திருமணம் முடித்து வைத்துவிட்டார்கள். நானும் மானத்தைக் காத்துக் கொள்ளும் வேகத்தில் எனது காதல் கடிதங்கள் அத்தனையும் கட்டி அக்காளிடம் அதாவது உங்கள் மனைவியிடம் கொடுத்து விட்டேன். அந்தக் கடிதங்களைத் தையல் இயந்திரத்தில் எனது அடைக்கலப் பொருளாக ஒளித்து வைத்திருப்பதாக அப்பொழுதே என்னிடம் சொன்னாள். அப்புறம் சில நாட்களுக்கெல்லாம் நான் என் கணவருடன் வெளிநாட்டுக்குச் சென்றுவிட்டேன். திரும்பி வந்து விசாரித்தபொழுது அக்காள் மரித்துவிட்டதாக அறிந்தேன். அதனால் என் கடிதங்களைப் பற்றிய கவலை என்னைப் பற்றிக் கொண்டது."




இதைக் கேட்டதும் நான் தையல் இயந்திரம் பக்கம் ஓடினேன். டிராயரைத் திறந்து ஒரு கடிதத்தைப் பார்த்தேன், இரண்டாவது கடிதத்தைப் பார்த்தேன். மூன்றாவது கடிதத்தைப் பார்த்தேன். எல்லாக் கடிதங்களிலும் 'என் அன்புக்குகந்த நீலம்' என்றே தொடங்கியிருந்தது. நான் எனது நெறி தவறாத மனைவியைத் தக்கக் காரணமின்றி ஐயவசப்பட்டுக் கொன்று போட்டுவிட்டேன் என்பதில் ஐயமற நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. எனது செயலை நினைந்து நான் கதறிவிட்டேன்.

நீலம் போய்விட்டாள். ஆனால் பச்சாத்தாபத் தீயில் விழுந்து என் உள்ளம் துடிக்கத் தொடங்கிவிட்டது. என்ன பச்சாத்தாபம்! கொலை! கொலை! நான் கொலை புரிந்துவிட்டேன்!

இந்தக் காரணத்தினால் எனக்கு நானே தண்டனை கொடுத்துக் கொள்ள விரும்பினேன். அதுவும் ஈவு இரக்கமற்ற கொடும் தண்டனை! நான் எந்த வலது கையினால் அவளது கழுத்தை நெரித்துக் கொன்றேனோ, அதற்குத் தண்டனை கொடுக்க விரும்பினேன்! கழுத்தை நெரித்தபொழுது படுக்கையில் என் மனைவி எப்படித் துடிதுடித்திருப்பாளோ, அப்படி அந்தக் கை துடித்துத் துன்புற வேண்டும் என்பதற்காகவே, நான் நூற்றாறு முறை கத்தியினால் என் கைகளைக் கீறி விட்டுக் கொண்டேன். ஆனால் தங்கள் மருந்தினால் அது அத்தனை முறையும் குணம் அடைந்து விட்டது! எனக்கு அது ஒப்புதல் இல்லை.

நான் இப்பொழுது துயரத்தின் கடைசிக் கோட்டில் நிற்கிறேன். என்னை எரிக்கும் இந்தப் பச்சாத்தாபத் தீயை அவிக்க ஒரே ஒரு வழிதான் தோன்றுகிறது. அது இதோ என் எதிரே இருக்கும் நஞ்சுக் கோப்பைதான். கண்ணுக்குப் புலனாகாத என் காயத்தின் கதை இதுவே!"

டாக்டர் கடைசி வாக்கியங்களைப் படிக்கும் பொறுமையை இழந்து போலீஸாரின் உதவியோடு அந்தச் செல்வந்தனின் வீட்டுக்கு விரைந்தார். அவர் போய்ப் பார்த்த பொழுது அந்தச் செல்வந்தன் மேஜையில் தலையை முட்டுக் கொடுத்துக் கொண்டு என்றும் கலையாத உறக்கத்தில் ஆழ்ந்திருந்தான்.

டாக்டரின் விழிகளைக் குளம் கட்டிய நீர் மறைத்தது.

ஹிந்தியிலிருந்து தமிழாக்கம்: ரா. வீ.

# ஸ்ரீ வைஷ்ணவி ஆலயம்

**திருமுல்லைவாயில், சென்னை - 600062**

**(தொலைபேசி: 580337)**

*ஸ்தாபகர் :*

**ஸ்வாமி அன்வானந்தா** (சாது பார்த்தசாரதி)

வழக்கம்போல் இவ்வருடமும் நவராத்திரி உற்சவம் செப்டம்பர் 27லிருந்து அக்டோபர் 5ந் தேதி முடிய வெகு சிறப்பாக நடைபெற இருக்கிறது. அக்டோபர் 11, 12 தேதிகளில் சண்டி ஹோமமும் நடக்கிறது.

ஏராளமான பக்தர்கள் கூடும் இந்த ஒன்பது நாள் விழாவுக்குத் தங்களது திரவிய சகாயத்தைக் கோருகிறோம். பணமும், பண்டங்களும் ஆலய அலுவலகத்துக்கே கொண்டு வந்து தரலாம். செக்காவது, டிராஃப்டாவது அனுப்பினால் "ஸ்ரீ வைஷ்ணவி டிரஸ்ட், திருமுல்லைவாயில், சென்னை-600062" என்ற பெயருக்கு ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பவும். பண்டங்களைப் பார்சலில் அனுப்பினால் பாடி, லாரி ஆபீஸ், அல்லது ஆவடி ரயில் நிலையத்துக்கு அனுப்பி, அவற்றுக்கான பார்சல் ரசீதை எங்களுக்கு அனுப்பவும். அழுகிப் போகக்கூடிய பண்டங்களை முன்னறிவிப்பு இன்றி அனுப்பவேண்டா.

டிரஸ்டிகள்
ஸ்ரீ வைஷ்ணவி ஆலயம்

---

## 1898
**முதல் பிரசித்தி பெற்றது**

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்

## ஆயுர்வேதாஸ்ரமம்
பிரைவேட் லிமிடெட் - சென்னை-17.

---

சமையலுக்குச் சிறந்தது

# காமதேனு வனஸ்பதி







## காமதேனு
இருமுறை
சுத்திகரிக்கப்பட்ட
தாவர எண்ணெய்



மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை-2 • சேலம் ஜில்லா • தமிழ் நாடு

# எஸ்.ஏ.ஜி.

எஸ்.ஏ.ஜி. என்று நண்பர்களாலும் சம அந்தஸ்துடையவர்களாலும் அழைக்கப்பட்ட திரு எஸ். ஏ. கோவிந்தராஜன், வாழ்நாள் முழுதும் அலுப்பு சலிப்பின்றிப் பயனுள்ள பல துறைக் காரியங்களில் ஈடுபட்டிருந்தார்.

சென்னை ராஜதானிக் கல்லூரியில் ஆங்கில இலக்கியத்தில் எம். ஏ. பட்டம் பெற்ற இவர், கல்லூரியின் உபகாரச் சம்பளத்தைத் தவிர ஆங்கில ஞானத்துக்காக வழங்கப்படும் தாம்ஸன் உபகாரச் சம்பளத்தையும் பெற்று வந்தார். 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியர் குழாத்தில் ஒருவராக முப்பது ஆண்டுகளுக்கு மேல் சிறப்புப் பணியாற்றிய எஸ்.ஏ.ஜியை மதிப்பு மிக்க பத்திரிகையாளர் என வர்ணிப்பது பால் வெளுப்பு என்று கூறுவதைப் போலத்தான். பத்திரிகையாளராக விளங்



கவே பிறவி எடுத்தவர் என்று கூறத்தக்க அளவுக்கு அவர் விரும்பி ஏற்ற தொழிலாகவும் அது விளங்கியது. விடாமல் மேற்கொண்ட பொழுதுபோக்காகவும் திகழ்ந்தது.

இரண்டாம் உலக யுத்தத்தினை யொட்டி நெருக்கடி நிலை உருவானபோது இந்திய அரசாங்கத்துக்கு எஸ். ஏ. ஜி. பத்திரிகை ஆலோசகராக இருந்து உதவினார். பிரசுரமாகும் செய்திகளை மேற்பார்வையிட வேண்டியது அவர் பொறுப்பாயிருந்தது.

எகிப்து, இலங்கை, பிரிட்டன் முதலியவற்றுக்கும் ஐரோப்பிய நாடுகள் பலவற்றுக்கும் திரு எஸ். ஏ. ஜி. சென்று திரும்பினார். அமெரிக்காவுக்கும் அந்நாட்டு அரசாங்கத்தின் அழைப்பினை ஏற்றுச் சென்றார்.

'ஹிந்து'விலிருந்து ஓய்வு பெற்ற பின் எஸ். ஏ. ஜி. ஹைதராபாத், உஸ்மானியா பல்கலைக் கழகத்தின் பத்திரிகைத் துறைத் தலைவராகவும் பேராசிரியராகவும் விளங்கினார். இங்கிருந்த 'டிப்ளமா' படிப்பைப் பட்டப் படிப்பாக மாற்ற இவர் மேற்கொண்ட இடைவிடா முயற்சி நற்பயன் அளித்தது. சென்னை, மைசூர், வெங்கடேசுவரா, நாக்பூர் ஆகிய பல்கலைக் கழகங்களின் பத்திரிகைத் துறைப் பிரிவுகளுடன் தொடர்பு கொண்டிருந்தார்.

விளையாட்டு விமர்சகர்களுள் எஸ்.ஏ.ஜி.யை முன்னோடிகளில் ஒருவராகக் கொள்ளலாம்.

அன்பும் பண்பும் மிக்கவர் எஸ்.ஏ.ஜி. என்றால் அது எழுத்துக்கு எழுத்து உண்மையாகும். அவர் உதவியை நாடி வருவோரிடமோ, அவருக்குக் கீழ் பணியாற்றுவோரிடமோ அவர் குரலை உயர்த்தி யாரும் கேட்டதில்லை.

தகுதியுடைய ஏழை மாணவர்கள் பலருக்கு அவர் ஓசைப்படாமல் உதவியிருக்கிறார். சம வயதுடையவர்களுடன்தான் அளவளாவ வேண்டும் என்று எண்ணாது சிறியோர், பெரியோர், கற்றறிந்தோர், கல்லாதவர் போன்ற சகலரிடத்திலும் அவரவருக்கு ஏற்றவிதத்தில் பழகுவார். செய்வன திருந்தச் செய்ய வேண்டும் என்பதில் அவர் கண்டிப்புக் காட்டினாலும் தவறு இழைத்தவர்களைக் கடிந்துரைத்ததில்லை.

'ஹிந்து' பத்திரிகையின் ஸ்தாபக ஆசிரியரான ஜி. சுப்பிரமணிய அய்யரின் வாழ்க்கை வரலாற்றினையும் வேறு இரு நூல்களையும் எழுதிப் புகழ் பெற்றார் எஸ்.ஏ.ஜி.

பத்திரிகைத் துறை சம்பந்தப்பட்ட அமெரிக்க நூல்களை இந்திய மாணவர்களுக்கு உகந்த விலையில் இங்கேயே பிரசுரிக்க வேண்டும் என்று இந்திய அரசு தீர்மானித்தபோது அத்தகைய நூல்கள் பலவற்றைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு எஸ். ஏ. ஜி.யிடமே ஒப்படைக்கப்பட்டது.

'பவன்ஸ்' பத்திரிகைத் துறைக் கல்லூரியின் முதல் கௌரவ முதல்வராகப் பணியாற்றினார். கடைசியாக ராஜாஜியின் வாழ்க்கை வரலாறு உருவாக அமைக்கப்பட்ட குழுவில் ஒருவராக இருந்து அரும் பணியாற்றி வந்த கட்டத்தில் காலன் அவரை நம்மிடமிருந்து பிரித்துச் சென்றான். நண்பராகவும் வழிகாட்டியாகவும் குருவாகவும் பலருக்கு விளங்கிய எஸ். ஏ. ஜி. குழந்தை உள்ளம் படைத்தவர். கள்ளங் கபடமறியாதவராய் எளிய வாழ்க்கை நடத்தினார்.

சர்ச்சிலிடம் தமக்குள்ள அபார மதிப்பினால் தமது வீட்டுக்கு "வின்ஸ்டன்" என்று பெயர் சூட்டினார் எஸ்.ஏ.ஜி. தமது 'ஹீரோ'வைச் சந்திக்க மறு உலகம் புகுந்திருக்கும் அவரைச் சுருட்டை இடக் கரத்தில் எடுத்துக் கொண்டு கைகுலுக்கி வரவேற்றிருப்பார் சர்ச்சில். என்னதான் அவர் நாட்டுப் பணியாற்றினாலும் அதை எடுத்துச் சொல்ல ஏட்டுப் பணியாளர்கள் தேவை என்பதை அறியாதவரா சர்ச்சில்!

—டி. பி. ஆர்.

இந்தப் பன்னிரண்டாவது, கடைசி சிறுகதைச் சிறப்பிதழில், "கதாசிரியன் செய்ய வேண்டிய காரியம்" என்ற தலைப்பிலும் "இறைவனிடம் எழுத்தாளனின் வேண்டுகோள்" என்ற தலைப்பிலும் இரண்டு அணுக்குகள் இடம் பெற்றுள்ளன. அணுக்குகளானாலும் கதிரவனைப் போன்று காலமெல்லாம் நிலைத்து ஒளி பரப்பும் கருத்துக்கள் அவை. அந்தக் கருத்துக்களின்படி வாழ்ந்தும் எழுதியும் வந்தவர் அமரர் திரு கு. அழகிரிசாமி. "முருங்கை மர மோகினி" என்ற இந்தச் சிறுகதை, நகைச்சுவை இழையோட மனித மனத்தின் விசித்திரங்களை மிக அழகாகச் சித்திரிக்கிறது; அழகிரிசாமியின் ஆற்றலையும் உணர்த்துகிறது.



# முருங்கைமர மோகினி

கு.அழகிரிசாமி.

ஊருக்கு வடபுறத்தில் இருக்கும் நாரணக் கவுண்டர் தோட்டத்துக் கிணற்றில் சதா காலமும் இறைவையாடிக் கொண்டிருந்தாலும் தண்ணீர் வற்றவே வற்றாது; எப்போதும் ஊறிக் கொண்டுதானிருக்கும். ஊருக்குப் புதிதாக வந்திருப்பவர்கள் அதில் இறங்கிக் குளித்தாலும் ஜலதோஷம் பிடிப்பதில்லை. அதோடு இறங்கிக் குளிப்பதற்கு ஏற்றபடி சௌகரியமான படிகளுடனும் வழுக்கலில்லாமலும் இருக்கும்.

இந்தக் காரணங்களை உத்தேசித்துத்தான் பலகாரக் கடை நல்லபெருமாள் பிள்ளை ஏறக்குறைய கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக இதே கிணற்றில் குளித்து வருகிறார். எண்ணெய் தேய்த்துக் குளிக்கும் சனியும் புதனும் தவிர்த்து மற்ற நாட்களில் அதிகாலையிலேயே வந்து ஸ்நானத்தை முடித்துக் கொண்டு சூரியோதயத்தின்போது கடை திறக்கப் போய் விடுவார்.

ஆனால், போன தைப் பொங்கலுக்கு மறுநாள் ஏதோ தலை வலிக்கிறது என்று சொல்லிக் கொண்டு படுத்தார் நல்லபெருமாள் பிள்ளை. அதிலிருந்து சுமார் இரண்டு மாத காலம் குளிர் ஜுரம் அவரை வாட்டியெடுத்துவிட்டது. ஆள் மிகவும் உருக் குலைந்து போய்விட்டார். ஊராரும் அவருடைய மனைவியும்கூட, 'நபர் வேலை சாய்ந்துவிடும்' என்று ஒரு நாள் சந்தேகப்பட்டுவிட்டார்கள். மனிதன் செத்துப் போன பிறகு அவனுடைய குணநிசயங்களைப் பற்றிப் புகழ்ந்து பேச ஆரம்பிக்கும் மனித சமூகம், நல்லபெருமாள் பிள்ளையின் 'அத்தாபத்தி'யான நிலைமையைக் கண்டு, அந்த நிமிஷத்திலேயே அவருடைய நல்ல குணங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டது. ஜனங்கள் கொஞ்சம் கூட்டிக் குறைத்துப் பேசிக் கொண்டாலும் அதில் முக்கால்வாசி உண்மையாகவே இருந்தது.

நல்லபெருமாள் பிள்ளைக்கு இப்போது வயது ஐம்பது. சந்ததி கிடையாது. இந்தக் கவலை ஒரு காலத்தில் அவரைக் கொஞ்சம் கஷ்டப்படுத்தியதுண்டு. ஆனால், அவருக்கு இப்போது அப்படிப்பட்ட லௌகிகமான ஆசைகள் ஒன்றும் கிடையாது. ஏதோ வயிற்றுப்பாட்டுக்கு ஒரு தொழிலைச் செய்து கொண்டு நாலு பேருக்கு நல்ல பிள்ளையாகக் காலத்தைத் தள்ளிவிட வேண்டும் என்பதைத் தவிர அவருக்கு வேறொரு லட்சியமும் கிடையாது. அவருடைய சுபாவத்துக்கேற்றபடி மிகவும் நல்ல மாதிரியாக அமைந்திருந்தாள் அவரது தர்மபத்தினி முத்தம்மாள்.



இதுவரையும் நல்லபெருமாள் பிள்ளை ஒருவரிடமும் ஒரு பைசா கைநீட்டி வாங்கியது கிடையாது. ஒருவனுடைய சொத்துக்கு ஆசைப்பட்டு ஒரு சாதாரணக் காரியத்தைக் கூடச் செய்தவரில்லை. ஏதோ நாலு கடைகளைப் போலத் தம் பலகாரக் கடையை நடத்திக் கொண்டு 'வெட்டு ஒன்று துண்டு இரண்டாக'க் கறார் வியாபாரம் செய்துவருகிறார்.

மண், பொன், பெண் என்ற மூன்று ஆசைகளையும் துறந்திருக்க இந்தச் சந்தர்ப்பத்திலே அவர் மரணப் படுக்கையில் படுத்திருந்து கடைசியில் உயிர்பெற்று எழுந்தும் விட்டார். சில நாட்கள் வீட்டுக்கும் வாசலுக்கும் நடமாடிக் கொள்ள மட்டும் முடிந்தது. உடம்பில் ரத்தப் பசை என்பதே இல்லாமல் வெளிறிப் போய் இருந்தார். இந்த இடைக் காலத்தில் — சுமார் இரண்டு மாத காலத்தில்— அவருடைய கடையில் வியாபாரம் அவ்வளவு சரிவர நடக்கவில்லை. ஒத்தாசைக்கு வேறு யார் இருக்கிறார்கள்? மூத்தம்மாளுக்குத் தன் கணவனுக்குப் பணிவிடை செய்யவே நேரம் சரியா யிருக்கும். அதனால் அவர் சேர்த்து வைத்திருந்த 'ஆஸ்தி'யெல்லாம் செலவழிந்து போய்விட்டது. மூத்தம்மாள் வாயையும் வயிற்றையும் கட்டி, கணவனுக்குத் தெரியாமல் வைத்திருந்த மூலதனமும் அநேகமாகக் கரைந்துவிட்டது. இந்தப் பண முடையை ஈடு செய்து பழைய நிலைமையை மீண்டும் அடைவதற்கு வியாபாரத்தில் சில கட்டுதிட்டங்களையும், வாழ்க்கைச் செலவில் சில சிக்கன விதிகளையும் கையாளத் தொடங்கி விட்டார்.

இப்போது அவருடைய கடையில் இட்டிலி, வடையெல்லாம் முன்னையில் பாதிகூட இல்லை என்பது ஊரார் புகார். நல்லபெருமாள் பிள்ளை கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரன் போலப் பலகாரங்களின் உருவைச் சிறிது சிறிதாகத் திடீரென்று ரகசியம் வெளிப்பட்டு விடாதபடி குறைத்துவந்தபோதும் ஊர் மகாஜனங்களின் கைத் தராசு எடை போட்டுப் பார்த்துவிட்டது. இது வியாபாரத்தைப் பொறுத்தமட்டிலும் பிள்ளையவர்கள் செய்த ஒரு பெரிய மாறுதல். அடுத்தபடி, வீட்டிலும் சாப்பாட்டுக்குக் குறைந்த அளவில் பதார்த்தங்களைத் தயாரிக்கச் சொல்லிவிட்டார். காலையில் வெறும் நீராகாரம். மத்தியானத்துக்கும் காலையாகார நேரத்துக்கும் நடுவேயுள்ள ஓர் இடை நேரத்திலே கண்ட வற்றலோடும் ரசத்தோடும் சாப்பாட்டு முறையைக் கழித்துவிடுவார்கள். இரவில் வெந்நீர்ப் பழையதுக்கு மத்தியானம் வைத்த ரசமும், விற்காமல் மிஞ்சிய வடையும்தான்.

பிள்ளையின் உடம்பும் பூரணமாகக் குணமாகிப் பழைய சுகத்துக்கு வந்துவிட்டது.

ஒருநாள் காலையில் சுமார் ஏழு மணிக்குத் 'தம்முடைய' பழைய கிணற்றுக்குக் குளிக்க வந்தார். ஐரணக் கவுண்டரின் தோட்டத்துக்குள் போக மேல் பக்கமாக உள்ள வாசல் வழியாக நுழைவார் நல்லபெருமாள் பிள்ளை. குளித்துவிட்டு வெளியே வருவது தென்பக்கத்து வாசல் வழியாக. மேல் பக்கத்தில் உள்ள ஓடைக் கரையில் ஒரு வேப்ப மரம் இருக்கிறது. அதில் பல் தேய்ப்பதற்காக ஒரு குச்சி ஒடித்துக் கொண்டு அப்படியே மேற்கு வாசல் வழியாக நுழைவது சௌகரியமாயிருக்கும். தென் பக்கத்து வாசல் வீட்டுக்குச் சமீபம்.

ஏறக்குறைய மூன்று மாதங்களுக்கு அப்புறம் இப்பொழுதுதான் அவர் முதல் தடவையாக அந்தத் தோட்டத்துக்குக் குளிக்க வந்திருக்கிறார். அதனால் இப்போது அங்கே ஏற்பட்டிருக்கும் சிற்சில மாறுதல்கள் அவருடைய கண்ணில் பட்டன.

இப்போது மிளகாய்ச் செடிகள் பெரிதாக வளர்ந்து பூவும் பிஞ்சுமாக இருந்தன. அவரைக் கொடி பக்கத்திலிருக்கும் அகத்தி மரங்களின் மீது படர்ந்து குலை குலையாகக் காய்த்திருந்தது. கிணற்றுக்கு மேல்புறமாக உள்ள நாலைந்து தென்னை மரங்களில் இருக்கும் இளநீர்க் குலைகள் களவு போகாமல் இருப்பதற்காக மரங்களின் மேல் பாகத்தில் முள் கம்பியைச் சுற்றி விட்டிருந்தார் கவுண்டர்.

பல் தேய்த்துக் கொண்டிருந்த நல்லபெருமாள் பிள்ளையின் கண்கள் இந்த முள் கம்பியைக் கவனமாகப் பார்த்தன. ஏதோ சற்று யோசித்தார். உடனே அவருடைய உள்ளம் கொஞ்சம் விளையாட ஆரம்பித்துவிட்டது!

'களவு செய்ய வேண்டும் என்று வருகிறவனை இந்த முள் கம்பியா தடுத்துவிடும்? இதை இலேசாகக் கழற்றிவிட்டு மரமேறுவதென்ன சிரம வித்தையா? இது சரி; இந்த இளநீர்க் குலைகளைத்தான் கம்பியைச் சுற்றிப் பத்திரம் செய்து விட்டார். இதோ பக்கத்திலே அவரைக் கொடியில் காய்கள் கொத்துக் கொத்தாய்க் காய்த்திருக்கிறதே! இந்த அவரைக் கொடிக்கு முள் கம்பி சுற்றி வைக்கக் கூடாது கவுண்டர்? அதுதானே! ஏதோ கடவுளுக்கும் மானத்துக்கும் பயந்து மனுஷன் பேசாமல் இருந்தால்தான் போச்சே ஒழிய அவனுக்குக் காவல் போட முடியுமா என்ன?

இப்படி சுவாரசியமான குறும்புத் தனத்தில் ஈடுபட்டு ஐரணக் கவுண்டரின் மூளையைக் களிமண்ணாக்கி விட்டார் பிள்ளை. கொஞ்சம் ஏளனமாகச் சிரிக்கவும் செய்தார்.

பொழுது மேலேறி வெய்யில் 'சுள்'ளென்று அடித்தது. உடனே எழுந்து குளிப்பதற்காகக் கிணற்றுக்குள் இறங்கினார்.

குளித்துவிட்டு ஈரத் துணியை உதறி மேலே போட்டுக் கொண்டு வெளியே வந்தார். அப்போது கிணற்றுக்கு வடமேற்கு மூலையில்

## நவராத்திரி



"நம்ம வீட்டுக் கொலுவுக்கு 'மூன்று படி லட்சியம்; ஒரு படி நிச்சயம்' என்றீர்கள். இதுவரை அந்த ஒரு படியைக் கூடக் காணோமே!"



"டான்ஸ் பொம்மைக்குத் தலை உடைந்து விட்டது. போலீஸ்காரப் பொம்மைக்கு உடல் உடைந்து விட்டது. உருப்படியாயிருந்ததை ஒட்ட வைத்தேன்!"

"சமர்த்தோன்னே, நல்ல பெண்ணு லட்சணமா சுண்டலை வாங்கிண்டு போயிடு, பாட ஆரம்பிச்சுடாதே!"



ஓம்:



# அருள்மிகு சண்முகநாத சுவாமி திருக்கோயில்

## குன்றக்குடி

### திருப்பணி வேண்டுகோள்

அறுபடை வீடுகளில் குன்றுதோறாடல் குன்றக்குடி, அருணகிரி நாதர் கனிந்து திருப்புகழ் பாடிப் பேரருள் பெற்றது குன்றக்குடியில். வீரமருது பாண்டியரின் பிளவை நோய் நீக்கியருளியதும் குன்றக்குடி: கண்கண்ட தெய்வம் – பிணியெலாம் தீர்க்கும் பெருமான் – மிடியெலாம் களையும் எந்தை முருகன் அறுமுகச் செவ்வேள் நந்தம் குடிமுழுதும் காக்கும் குலதெய்வமாக எழுந்தருளியுள்ள குன்றக்குடி சண்முகநாத சுவாமி திருக்கோயில் திருப்பணி நடைபெற்று வருகிறது. அன்பர்கள் திருப்பணிக்கு நன்கொடை வழங்கி உதவும்படி கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

பரம்பரை அறங்காவலர்
அருள்மிகு சண்முகநாதசுவாமி திருக்கோயில்
பிரான்மலை வகை ஐந்துகோவில் தேவாலயம், குன்றக்குடி
(இராமநாதபுரம் மாவட்டம்)

அவரைக் கொடிகளின் நடுவே ஒரு சிறு முருங்கை மரத்தில் ஐந்தாறு காய்கள் தொங்குவதையும் பார்த்துக் கொண்டார். அந்த முருங்கை இதுவரையும் செடியாக இருந்து இப்போதுதான் முதல் முதலாகக் காய்க்க ஆரம்பித்திருக்கிறது. அந்தக் காய்களுக்கும் பாதுகாப்பு வேண்டுமல்லவா? ஆனால் முருங்கை மரத்துக்கு முள் கம்பி சுற்ற முடியுமா? முடியாது. அதனால் மனிதனுடைய மான உணர்ச்சியில் நம்பிக்கை வைத்து அந்த மரத்தின் ஒரு கிளையில் ஒரு பழைய செருப்பைக் கட்டித் தொங்க விட்டிருந்தார் ஐரணக் கவுண்டர். செருப்பின் காவலை மீறுவதற்கு மனிதனுக்குத் தேக பலம் இருந்தாலும் மனம் அவமானத்துக்குப் பயப்படும். கேவலம் நாலு முருங்கைக் காய்களுக்குச் செருப்படியா என்று நினைத்துத் திருடன் திரும்பிவிடுவான் என்பதே கவுண்டரின் திடமான கருத்து.

இந்த விஷயத்தையும் நன்கு புரிந்துகொண்டார் நல்லபெருமாள் பிள்ளை. 'கவுண்டரும் இலேசுப்பட்டவர் இல்லை' என்று நினைத்துக் கொண்டே எட்டு மணிக் கெல்லாம் வீடு போய்ச் சேர்ந்தார்.

**ம**றுநாள் காலை ஏழு மணிக்கு மேலேயே இருக்கும். பிள்ளை முன் தினத்தைப் போலவே அந்தக் கிணற்றில் கமலைக் கிடங்கின் பக்கமாக உள்ள கல்லின்மேல் உட்கார்ந்து பல் தேய்த்துக் கொண்டிருந்தார். அவருடைய பார்வை முருங்கைக் காய்களின் மேல் படிந்திருந்தது. ஒரு பொருளை வெகு நேரம் பார்த்தால் வெறுப்புத் தட்டுவதும் உண்டு; அல்லது அதன் மேல் அளவு கடந்த ஆசை பிறப்பதும் உண்டு.

ஏற்கனவே உடல் பலவீனமுள்ள பிள்ளை அவர்களுக்கு மனசிலும் பலவீனம் ஏற்பட்டது போல், இந்தச் சமயத்தில் முருங்கைக் காய்களின்மேல் சபலம் தட்டிவிட்டது. முருங்கைக் காய்களைப் பார்த்துக் கொண்டே இருந்தார் பிள்ளை.

'அதிகப் பிஞ்சும் அதிக முற்றலும் இல்லாத படி கறிக்குப் பக்குவமான காய்கள்தான். இதை வைத்துக் குறைந்தது மூன்று நாட்களுக்காவது கறிப்பாட்டைக் கழித்து விடலாம். உம்? ..... பக்கத்திலும் ஒருவரும் இல்லை.....'

சுற்று முற்றும் பார்த்துக் கொண்டார்.

'நாமென்ன ஆயிரம் ரெண்டாயிரம் என்று அடுத்தவன் சொத்தைக் கொள்ளையடிக்கவா போகிறோம்? கவுண்டருக்கு நாலைந்து முருங்கைக் காய்கள் போய்விட்டால் குடி முழுகிப் போய்விடாது. நம்முடைய கஷ்ட நிலைமைக்கு....'

தோட்ட வேலைக்காரன் தண்ணீர் இறைப்பதற்காக மாடுகளைத் 'தை' என்று சத்தம் போட்டு ஓட்டி வருவது பிள்ளையின் காதில் படவே மூச்சு விடாமல் எழுந்தார். கிணற்றுக்குள் இறங்கிக் குளிக்கப் போய்விட்டார்.

''சேசே, இது சுத்த எச்சிக்கலைத்தனம்...'' என்று அவர் மனம் அப்புறம் சொன்னது.

**ப**லகாரக் கடையில் அவர் உட்கார்ந்திருக்கும்போது காய்கறிக் கடைக்காரி வந்தாள். உடனே முத்தம்மாள் அன்றைக்கு வீட்டுக்கு வேண்டிய இரண்டொரு காய்கறிகளை வாங்க



### இறைவனிடம் எழுத்தாளனின் வேண்டுகோள்

எழுதுகிற கதையில் நான் ஒரு நீதியை இணைக்காமல் இருக்க வேண்டும். அர்த்தமில்லாத கதையை எழுதாமலும் இருக்கவேண்டும். நான் என் வேலையை அலட்சியப்படுத்தத் துணியாத அளவுக்கு அதனிடம் எனக்கு மதிப்பு மிகுமாறு செய். வார்த்தைகள், மக்கள் இரண்டுமே உயிருள்ளவையாதலால் வார்த்தைகளைக் கையாளும்போதும் மக்களைப் பற்றி எழுதும்போதும் என்னைச் சத்தியவானாக இருக்கச் செய். ஆற்றுக்கும் சரி," எழுத்துக்கும் சரி, தெளிவுதான் மிக முக்கியமான குண நலன் என்பதை எனக்கு உணர்த்து. ஏராளமாக இருக்கும் கலப்பட விஷயத்தை விடச் சிறிதளவே உள்ள தூய்மையான விஷயத்துக்கு மதிப்பு மிகுதி என்பதை நான் அறியச் செய். வட்டாரச் சூழ்நிலையின் வண்ணங்களை நான் பார்க்கக் கற்றுத் தா. அதே சமயம் அதன் உள்ளொளியை உணராத குருடனாக நான் இருந்து விடாமல் கவனித்துக் கொள். யதார்த்தம் என்ற துறையில், மனிதாபிமானத் துணியை நெய்யும்போது, அறுந்து விடாது உறுதியாக இருக்கக் கூடிய இலட்சிய நூலை எனக்குக் கொடு. மக்களைவிடப் புத்தகங்களிடம் நான் அதிக அக்கறை செலுத்திவிடாமலும் வாழ்க்கையை விடக் கலையில் நான் அதிக ஈடுபாடு காட்டி விடாமலும் இருக்குமாறு என்னைக் கவனித்துக்கொள். என்னுடைய வேலையை முழுமையாக என்னால் இயன்ற அளவு சிறப்பாகச் செய்து முடிக்க என்னைத் திடப்படுத்து. என் பணி முடிந்ததும் என்னை ஓய்வு பெறச் செய். உனக்கு விருப்பமான சாந்தியைத் தா. அமைதியான உள்ளத்திலிருந்து நன்றியுடன் 'ஆமென்' என்று கூற எனக்கு உதவு. - ஹென்றி வேன் டைக்

ஆரம்பித்தாள். அப்போது பிள்ளையவர்களின் மனக் கண்ணில் மேற்படி முருங்கைக் காய்கள் தோற்றமளிக்க ஆரம்பித்தன. 'யாரும் இல்லாத சமயத்தில் போனால் கொண்டு வந்திருக்கலாம். அப்படி ஆறு காய்களை வாங்க வேண்டுமென்றால் இரண்டணாவாவது ஆகும். இந்தக் காலத்தில் இரண்டணா யார் கொடுக்கிறார்கள்?' என்று நினைத்துக் கொண்டார். கொஞ்ச நேரம் கழித்து மனம் மாறிவிட்டது.

'சே, செருப்பைக் கட்டித் தொங்க விட்டிருக்கும்போது...'

இப்படியே மனம் மிகவும் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தது. ஏதோ அவருடைய பலத்தைச் சோதிக்க வந்த மோகினிப் பிசாசு

## கதாசிரியர் செய்யவேண்டிய காரியம்

என் வேலை, நான் நிறைவேற்ற முனையும் காரியம் என்னவெனில் எழுத்துக்கு உள்ள சக்தியினால் உங்களை உணரச் செய்வதுதான்; அதற்கும் முன்னதாக உங்களைப் பார்க்க வைப்பதுதான். இவ்வளவே - இதற்கு மேல் இல்லை. இதுவே எல்லாம். - ஜோஸப் கான்ராட்.

போல் இருந்தது அந்த முருங்கை மரம். இதைப் பேராசை என்று சொல்ல முடியுமா? கேவலம் இரண்டாறு முருங்கைக் காய்கள் தான். அப்படிப் பேராசை இருந்திருந்தால் நல்லபெருமாள் பிள்ளை வியாபாரத்தில் கொள்ளை யடித்திருப்பார். அது ஒரு பக்க மிருக்க, அவர் கண்ணுக்கு அவரைக்காய்களும் பட்டதே, அவற்றின்மீது அவருக்கு ஏன் ஆசை போகவில்லை? இது என்ன மர்ம மென்று தெரியாமல் பிள்ளையே மிகவும் சங்கடப்பட்டார்.

மறுநாள் காலையில் நாலரை மணிக்கு இருட்டோடு இருட்டாகக் கிணற்றுக்குக் குளிக்கப் போனார். கிருஷ்ண பட்சத்துக் காலைப் பிறை கீழ்வானத்தின் அடிப் பாகத்தில் பிரகாசித்துக்கொண்டிருந்தது. நல்லபெருமாள் பிள்ளை வழக்கம் போல மேற்குப் புறமாகப் போய் வேப்பங் குச்சியை ஒடித்தார்; ஆனால், என்றுமில்லாத வழக்கமாக அரவம் கிளம்பாமல் ஒடித்தார். களவுக்கு இந்த முன்ஜாக்கிரதை பூர்வாங்க ஏற்பாடாக இருந்தது. கிணற்றின் பக்கத்தில் வந்து முருங்கைக்கு எதிரே நின்று கொண்டு, காய்களைப் பறிக்கலாமா கூடாதா என்று சிறிது நேரம் மனசோடு வாதாடினார். மனம் என்னவோ வழக்கம் போல் நீதி போதித்தது. ஆனால் ஆசையோ, பிடிவாதமோ — ஏதோ ஒரு சக்தி அவரை உந்தித் தள்ளியது. மரத்துக்கு மேல் புறமாகவும் பிறை நிலாவுக்கு நேராகவும் நின்று மரத்தின் காய்கள் எங்கே தொங்குகின்றன என்பதைப் பார்த்துக் கொண்டார். ஐந்தாறு காய்கள் தொங்கியது தெரிந்தது. கூடவே, செருப்பும் தொங்கிக் கொண்டிருந்தது!

இடமென்று சுற்று முற்றும் பார்த்துவிட்டுக் காய்களைப் பறிக்க ஆரம்பித்து விட்டார். அவசரம் அவசரமாகக் காய்களைப் பறிக்கும்போது முருங்கைப் பூக்கள் தலையிலும் உடம்பிலும் உதிர்ந்து விழுந்தன. உடனே அவற்றை உதறினார். அப்புறமும் செருப்பைப் பார்க்கும்போது அவருக்கு அவமானமாக இருந்தது. அதனால் அதையும் மரத்திலிருந்து அறுத்து எறிந்துவிடத் தீர்மானித்தார். அப்படியாவது மானத்தைக் காத்துக் கொள்ளலாம் அல்லவா?

செருப்பு கட்டப்பட்டிருந்த கயிறு பலமாக இருந்தது. அதை வெட்டி இழுக்கும்போது முருங்கைக் கொம்பு முறிந்து விட்டது. அது முறியும்போது ஏற்பட்ட சத்தம் பிள்ளையவர்களுக்குப் பீரங்கி வேட்டைப்போல் கேட்டது. அதிர்ச்சியினால் வெலவெலத்துப் போய் ஒரு முறை நாலா பக்கமும் பார்த்தார். நல்ல வேளை, ஒருவரும் இல்லை. என்றாலும் இந்தப் பயங்கரமான காரியத்தைச் செய்த பின் கிணற்றில் இறங்கிக் குளித்து விட்டுப் போகத் தைரியம் எங்கிருந்து வரும்? உடனே முருங்கைக் காய்களைக் கக்கத்தில் செங்குத்தாக வைத்து இடுக்கி, மேல் துண்டினால் போர்த்திக்கொண்டு அவசரம் அவசரமாகப் புறப்பட்டார். மேல் பக்கமாகத் தூரத்தில் யாரோ சுருட்டுப் பிடித்துக் கொண்டு வருவது தெரிந்தது. அதனால் தெற்கு வாசலை நோக்கி வேகமாகப் போகும்போது, வரப்பிலிருந்து எப்படியோ வழுக்கிப் பக்கத்தில் இருந்த கீரைப் பாத்தியில் மிதித்துவிட்டார். அப்போது முதல் நாள் மாலை தண்ணீர் இறைக்கப்பட்டுச் சேறாக இருந்த அந்தப் பாத்தியின் ஈர மண் அவரது வேஷ்டியிலெல்லாம் தெறித்து விழுந்து விட்டது. உடனே உயிரைக் கையில் ஏந்திக் கொண்டு வீட்டை நோக்கி ஓட்டம் பிடித்தார்.

மனைவியிடம் விஷயத்தைச் சொல்லாமல் காய்களை ஓரிடத்தில் வைத்து விட்டு உடையை மாற்றிக் கொண்டார். அதன் பின் கிணற்றுக்குக் குளிக்கப் போகத் தைரியம் இல்லை. உடம்பெல்லாம் ஒரே நடுக்கம். ஜலதோஷம் பிடித்திருக்கிறது என்று ஒரு சிறு பொய்யைச் சொல்லி விட்டு முத்தம்மாளை வெந்நீர் போடச் சொன்னார்.

காலை பத்து மணிக்கெல்லாம் யாரோ காய்கறிக் கூடைக்காரியிடம் வாங்கியதாகச் சொல்லி மேற்படி முருங்கைக் காய்களை மனைவியின் கையில் கொடுத்தார் பிள்ளை.

மத்தியானம் பன்னிரண்டு மணிக்குச் சாப்பிடுவதற்காக இலையின் முன்னால் உட்கார்ந்து கொண்டிருந்தார் பிள்ளை. 'ஐம்பது வருஷ காலமாக அடுத்தவன் பொருளுக்கு ஆசைப் படாத மனசுக்கு முருங்கைக் காயின் மேலே எதற்கு இப்படி ஆசை விழுந்தது? ஆனால், இது ஆசையா? பொதுவாக, ஆசை என்றால் எல்லாவற்றிலுமே ஆசை விழ வேண்டுமே? அவரைக் காயும் எட்டிப் பறிக்கிறாற்போலத் தானே இருந்தது? அதை ஏன் திருடவில்லை?..'

மனைவி முருங்கைக் காய் சாம்பாரைச் சாதத்தில் விட வந்தாள்.

உடனே அவர், ''வேறு ரசம் கிசம் வைக்கல்லையா? அதைக் கொண்டு வா. முருங்கைக் காய் சாம்பார் வேண்டாம்'' என்று சொன்னார்.

மனைவி மிகவும் ஆச்சரியப்பட்டு, ''என்ன? சாம்பார் வேண்டாமா? நீங்கதான் முருங்கைக்காய் சாப்பிடணும்னு ஆசைப்பட்டு வாங்கி யிருக்கிறீர்களே, பிறகு வேண்டாம்னு ஏன் சொல்றீங்க?'' என்று கேட்டாள்.

''ஆசை என்ன ஆசை? ஒன்னிலே ஆசை விழுந்தால் அதைச் சாப்பிட்டுத் தீர்க்கணும்னு கட்டாயமா?'' என்று சொல்லிக் கீரையை விரவிக் கொண்டு சாப்பிடப் போனார்.

முத்தம்மாளுக்கு ஒன்றும் புரியவில்லை.

'எனக்கு ஆசையா விழுந்தது? அதற்கு இந்த முருங்கைக்காய் என்ன தங்கப் புதையலா?' என்று மனசுக்குள் நினைத்தவாறே கீரைச் சாதத்தை விழுங்கினார் பிள்ளை.

முத்தம்மாள் தன் கணவரின் ஜலதோஷத்தை உத்தேசித்துத் தயாரித்திருந்த மிளகு ரசத்தை எடுத்து வர உள்ளே போனாள்.

# தெய்வக் குழந்தைகள்

ஜெய்சங்கர், முத்துராமன் இருவருக்கும் சம அளவில் சான்ஸ் இருக்க வேண்டும் என்பதற்காகத் திரைக்கதையைச் சரியாகப் பங்கீடு பண்ணி அமைத்திருக்கிறார்கள். படத்தின் முற்பகுதியில் ஜெய்சங்கர் குத்துச் சண்டையில் ஆரம்பித்துத் தம் ரசிகை ஜயாவின் காதலுக்கு ஆளாகி, அதே சமயத்தில் சினிமா நடிகை கமலா தேவியின் காதலுக்கும் வெறுப்புக்கும் ஆளாகி, அதன் காரணமாகப் பலவிதமான துன்பங்களுக்கு ஆளாகி, இறுதியில் கொலைக் குற்றத்துக்கும் ஆளாகிறார். (எத்தனை 'ஆளாகி' என்கிறீர்களா? என்ன செய்வது! நான் படத்தைப் பார்த்துவிட்டுச் சிரமத்துக்கு ஆளாகி யிருக்கிறேனே!)

ஜெய்சங்கர் தம் நடிப்பில் சிறிதும் குறை வைக்காமல் மிகவும் சுவாரசியமாகத் தம் பொறுப்பை நிறைவேற்றி யிருக்கிறார்.

மனைவிக்கு அடங்கின சரக்கு முத்துராமன்! ஆகவே அவர் நடிப்பும் அடங்கி ஒடுங்கித்தான் காணப்படுகிறது. மனைவி கிழித்த கோட்டைத் தாண்டாத அப்பாவிக் கணவனின் பாகம் இப்போதெல்லாம் படங்களில் அதிகமாகி வருகிறது! கொஞ்ச நாளைக்கு நிறுத்தி வைக்கலாம்!

ஜெயாவுக்கு இந்தப் படத்தில் சிறப்பாக நடிக்கப் பல சந்தர்ப்பங்கள் கிடைத்திருக்கின்றன. குத்துச் சண்டை வீரரை ரசிக்கவும், அண்ணனையும் அண்ணியையும் எதிர்த்து வீட்டை விட்டு வெளியேறிக் காதலித்தவனையே மணந்துகொள்ளவும், கடைசியில் சித்த சுவாதீனத்தை இழந்து தவிக்கவும் நேரும் சந்தர்ப்பங்களில் நன்றாக நடித்திருக்கிறார்.



இந்தப் படத்தில், நமது பாராட்டுக்கள் ஸ்ரீதேவி, மாஸ்டர் ராமு என்னும் குழந்தை நடிகர்களுக்குத்தான்! இருவரும் தங்கள் நடிப்புத் திறமையினால் ரசிகப் பெருமக்களின் கண்களில் நீர்மல்கச் செய்துவிட்டனர்! இருவருக்குமே ஒரு 'சபாஷ்' போட்டுவிட வேண்டியதுதான்! (தமிழ்ப் படங்களில் இனித் திறமைவாய்ந்த புது நட்சத்திரங்களைக் காண முடியுமா என்று யாரும் ஏங்க வேண்டியதில்லை. பல இடங்களில் ஒளிந்து கொண்டிருக்கும் திறமையை வெளியில் கொண்டுவரத் தயாரிப்பாளர் குகநாதனைப் போன்ற நல்ல மனிதர்கள்தான் தேவை!)

குழந்தை நடிகர்களுக்கு இணையாக நடித்திருக்கும் நாயையும் பாராட்டியாக வேண்டும். பசியினால் அயர்ந்து சோர்ந்து தூங்கிவிட்ட குழந்தைகளுக்காக அது கடைக்குப் போய் உணவுப் பண்டங்கள் வாங்கி வரும் கட்டம் ஒன்று போதும், நாயின் நடிப்பைப் பாராட்ட!

திரைக் கதையில், பல்சுவை அம்சங்களும் இருக்க வேண்டும் என்பதற்காக, வில்லனின் அட்டகாசம், கொலை, பழி வாங்கல் என்று என்னத்தை யெல்லாமோ சேர்த்துக் கதம்ப நிகழ்ச்சி மாதிரி செய்து விட்டார்களே!

எஸ். பி. முத்துராமன் படத்தைக் குழப்பமில்லாமல் டைரக்ட் செய்திருக்கிறார்.

குமாரி பத்மினிக்குக் கொஞ்சம் மாறுபட்ட பாத்திரம். கட்டிய கணவனைத் தமக்கு அடங்கிய சரக்காக வைத்துக் கொள்வதற்கே அவருக்குச் சரியாக இருக்கிறது.

கதை, வசனம் குகநாதனுடையவை. வசனம் பாராட்டும்படி அமைந்திருக்கிறது. குத்துச் சண்டைக் காட்சிகள் நன்றாய்ப் படமாக்கப் பட்டிருக்கின்றன. இந்தப் படத்தின் ஒளிப் பதிவு சிறப்பான அம்சம்தான்.

முத்துராமன் திருமணத்துக்கு முன்பு ஒரு வேசியோடு தொடர்பு கொண்டிருந்ததாகக் கிளைக்கதையொன்றைப் புனைந்திருப்பது சற்று அசம்பாவிதமாய் இருக்கிறது.

ரோஜாப்பூவைக் கிள்ளும்போது கையில் முள் குத்துவது போலப் படம் பார்க்கும்போது பாடல்கள் நம் செவியில் குத்துகின்றன. முட்களை இலட்சியம் செய்யக் கூடாதுதான்! ரோஜாப்பூ பறிக்கும்போது முள்ளில் கைபடாமல் ஜாக்கிரதையாகப் பறிக்கலாம். ஆனால், படம் பார்க்கும்போது குறுக்கே வந்து கழுத்தையறுக்கும் பாடல்களைப் பொருட்படுத்தாமல் படம் பார்க்க முடியவில்லையே, என்ன செய்யலாம்!

இந்தப் படத்தை மொத்தமாக மதிப்பிட முடியாமல் திரைக்கதை அமைப்பு குறுக்கிட்டாலும், குழந்தை நடிகர்களின் அருமையான நடிப்பை நினைத்து மனம் பூரித்து மகிழ முடிகிறது. படம் பத்துக்கு ஏழு பழு இல்லை என்றால் சரிதானே! — காந்தன்

# இன்ஸ்பெக்டர் விக்ரம்

கதாநாயகி துப்பாக்கிகளைக் கீழே போடுமாறு உறுதியாக உத்தரவிட்டாள். ஒருவன் அவளை ஏமாற்றப் பார்த்தான்.

இந்தச் சுருக்கிலிருந்து தப்ப முடியாது!

ஆனால் அவள் சட்டென்று திரும்பி...!

டோய்ங்! டோய்ங்!

ஏய்! என்ன இது? இவனைச் சாகடித்து விட்டாயே!

எச்சரிக்கை செய்தேனா இல்லையா?

என்னிடம் தன் சாமர்த்தியத்தைக் காட்ட முயலும் எவனுக்கும் இதே கதிதான்! புரிகிறதா?

புரிகிறது, புரிகிறது! சரி, உனக்கு என்ன வேண்டும்?

எனக்கு நீதான் வேண்டும்!

நான் உன் உடைமை! உனக்காக எதையும் செய்யத் தயார்!

என்னுடன் பம்பாய்க்கு வர வேண்டும்!

அங்கே வந்து நான் என்ன செய்ய?

உன்னை இந்தியத் திரை உலகத்தின் மிகப் பிரபலமான கதாநாயகனாக்கிவிடுவேன்! எதிர் காலத்தில் நான் நடிக்கும் எல்லாப் படங்களிலும் நீதான் கதாநாயகன்!

(தொடரும்)

CONT'D

# ராஜாஜியின் ஜெயில் டைரி

பர்தோலியில் சத்தியாக்கிரகம் தாற்காலிகமாக நிறுத்தப்பட்டிருப்பது போதாது என்று இந்திய அரசாங்கத்துக்குத் தோன்றுகிறது. காங்கிரஸ் திட்டம் முழுவதையும் வாபஸ் வாங்க வேண்டுமாம். ஆனால் அது ஒரு காலத்திலும் நடவாத காரியம். சமரசத்துக்கு இடமே கிடையாது. இந்திய அரசாங்கம் இப்படிப் பேசுவதற்குக் காரணம் அவர்களுக்கு மனித இயல்பு எத்தகையது என்பது விளங்காததேயாகும். அவர்கள் பிடிவாதம் செய்வது வெறும் வேஷமாக இருக்கலாம். அவ்வாறின்றி அப்பிடிவாதம் உண்மையாயிருக்குமானால் நமக்கு நல்லதேயாகும். நாம் அடைய விரும்பும் லட்சியத்தை அடைவதற்கு நமக்குத் துணை செய்யும்படியாகக் கடவுள் அவர்களை நடத்திச் செல்கிறார் என்றே தோன்றுகிறது. காந்தியடிகள் பர்தோலித் திட்டத்தை விளக்குவதைவிட வெகு தெளிவாக அரசாங்கத்தார் விளக்குகிறார்கள். ஆம், நம்முடைய பகைவர்கள்தான் நம்முடைய சிறந்த பாஷ்யகாரர்கள். இதுதான் எந்தக் காலத்திலும் உண்மையாகும்.

மகமது ஹுஸேன் சுவையான 'ஜாம்' உள்ள டப்பாக்கள் இரண்டு எனக்குத் தந்தார். நான் ரொட்டியுடன் 'ஜாம்' சேர்த்துக் கொள்ளலாம் என்று சிறை அதிகாரி கூறினார். ஜெயிலர் எனக்கு அதை வாங்கித் தருவதாக வாக்களித்தார். ஆனால் அது மிகவும் தாமதமாகக் கிடைத்திருக்கும். மகமது ஹுஸேன் தாமதத்தைத் தடுத்து விட்டார்.

## 1922 பிப்ரவரி, 26உ

இன்று என் எடையைப் பார்த்தார்கள். நான் 102 ராத்தல் இருந்தேன். மகமது கௌஸ் 125 ராத்தல் இருந்தார். பழைய நிறை வந்துவிட்டதாக அவர் எண்ணுகிறார். சிறைப்புத்தகப்படி பார்த்தால் அவர் 5 ராத்தல் நிறை கூடியிருப்பதாகக் கூற வேண்டும்.

சென்ற ஐந்து வார காலமாக அதாவது ஜனவரி மாதம் மத்தியிலிருந்து எனக்குக் கொடுக்கும் விசேஷ உணவு பின்வருமாறு: நான்கு அவுன்ஸ் கோதுமையால் செய்த சப்பாத்திகள், ஆறு அவுன்ஸ் ரொட்டி, இரண்டு பைண்ட் பால், ஒரு அவுன்ஸ் வெண்ணெய், ஒன்றரை அவுன்ஸ் சர்க்கரை, மூன்று அவுன்ஸ் ஜவ்வரிசி. ஜவ்வரிசியை நான் உபயோகிப்பதில்லை. தோட்டிக்கே கொடுத்து விடுகிறேன். இந்த உணவுடன் தினந்தோறும் அதிகாலையில் சுட வைத்த கஞ்சி நீரையும் நான் குடித்து வருகிறேன்.

சிறைத் தலைமை அதிகாரி என்னுடைய உணவைப் பற்றி விசாரித்ததன் காரணமாக இன்று முதல் என் உணவுத் திட்டத்தில் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. இனிமேல் எனக்கு ரொட்டி தரமாட்டார்கள். பாலும் ஒன்றரைப் பைண்ட் தான் தருவார்கள். நாலு அவுன்ஸ் கோதுமை, ஒரு அவுன்ஸ் வெண்ணெய், ஒன்றரை பைண்ட் பால், கொஞ்சம் சர்க்கரை. மத்தியானச் சாப்பாட்டுக்காக நாலு அவுன்ஸ் ஜவ்வரிசி, இரண்டு ஆழாக்கு மோர் - இவை கிடைக்கும்.



பாலுங்கூடச் சில நாட்களுக்குப் பிறகு மீண்டும் இரண்டு பைண்டாகத் தந்தார்கள். சமைத்துக் கொள்ள ஒரு ஸ்டவ் தந்திருக்கிறார்கள்.

இதுவரை நான் சாப்பிடாமல் இருந்த ஜவ்வரிசிதான் இப்பொழுது என்னுடைய முக்கியமான மத்தியான உணவாகும். அத்துடன் பால் சேர்க்காமல் மோரையும் உப்பையும் சேர்த்துக் குடித்துச் சமாளித்துக் கொள்வேன். பாலைத் தரு முன் கடைந்து வெண்ணெயைத் தனியே எடுத்து விடுவதால், பாலில் சத்து மிகக் குறைந்து காணப்படுகிறது.

# ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும் ஏற்படும்போது வெட்கப்படுங்கள்... அல்லது



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்

ஷேவிங் வேண்டாம். அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய நளினமான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம். மென்மையான ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர்- இந்த க்ரீமை வேண்டாத ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது... வாரக்கணக்கில் பட்டுப்போல் மென்மை-தொட்டுப் பார்த்தால் மழமழப்பு... பெண்மையின் நளினத்தைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ஷேவருக்கு வழியனுப்பு: ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!



**ஆன் பிரெஞ்ச்** ஹேர் ரிமூவர்
அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்




2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffrey Manners & Co. Ltd.

LII MR 172 Tam

# தேசத்தைச் சீராக்கச் சேலம் தீர்மானங்கள்

**தமிழ்நாடு சுதந்திரக் கட்சியின் செயற்குழு - பொதுக் குழுக் கூட்டங்கள் 9-9-73ல் சேலத்தில் கூடி, சில முக்கியமான தீர்மானங்களை நிறைவேற்றியது. அவற்றின் சுருக்கம் வருமாறு :**

★ மக்களுக்கு இடையூறுகளை விளைவிக்கும் 'பந்த்' போன்ற ஆர்ப்பாட்டங்களைச் சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது.

★ மக்கள் தாங்க முடியாத அளவுக்கு விலைவாசி உயர்வினால் துன்பப் படுகிறார்கள். இதற்கு முக்கிய காரணமாக விளங்கும் இந்திரா காந்தியின் மந்திய அமைச்சரவை ராஜினாமா செய்து, பல்வேறு துறைகளில் நிபுணர்களாக விளங்குபவர்களைக் கொண்டு 'தேசிய சர்க்காரை' அமைக்க வற்புறுத்துகிறது.

★ வட ஆர்க்காடு மாவட்டத்தில் அறுவர் சேர்ந்து ஒரு ஹரிஜனப் பெண்ணை மானபங்கப் படுத்தியது தெரிந்தும், எவ்வித நடவடிக்கையும் எடுக்காததைக் கண்டித்து, உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று வற்புறுத்தியது.

★ ஆலய அறங்காவலர்களாக மதப் பற்றற்றவர்களையும், சர்க்காருக்கு வேண்டியவர்களையும் நியமிப்பதைக் கைவிட்டு, பாரம்பரியமுள்ள ஆஸ்திகர்களை நியமிக்கப் பொதுக் குழு அரசை வற்புறுத்துகிறது.

★ மாநில சர்க்கார் தற்போது தாற்காலிகமாக அறிவித்துள்ள வரிச் சலுகைகளை நிரந்தர வரிச் சலுகைகளாக்கி, எல்லா உணவுப் பொருட்களின் மீதும் உள்ள வரிகளை நீக்கக் கோரியது.

★ ஜனாதிபதியின் அங்கீகாரத்துக்காகக் காத்திருக்கும் குத்தகைதாரர்கள் சாகுபடி செய்யும் நிலங்களை அவர்களுக்கே சொந்தமாக்கும் மசோதாவைத் திரும்பப் பெற்று, அவசியமானால் கூட்டாய்வுக் குழு பரிசீலனைக்குப் பிறகு நிறைவேற்றலாம் என்றும், இந்தச் சட்டத்தினால் லட்சக்கணக்கான சிறு நிலக்கிழார்கள் பாதிக்கப்படுகிறார்கள் என்றும் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

★ மத்திய மாநில அரசுகள் நூல் வியாபாரத்தில் தலையிடுவதை நிறுத்தி, தற்போது சரியான முறையில் அரசு விநியோகம் செய்யாததனால் பாதிக்கப்பட்டுள்ள நெசவாளர்களின் பிரச்னைக்குத் தீர்வு காண ஒரு தீர்மானம் வலியுறுத்தியது.

★ சேலம் காந்தி சிலையையும், இதர இடங்களில் தேசத்தின் தலைவர்களின் சிலைகளையும் சேதப்படுத்துபவர்களை உடனடியாகத் தண்டிக்க ஒரு தீர்மானம் கோரியது.

★ அரசியல்வாதிகளின் தலையீடுகளினால் மாணவர்களிடையே வளரும் கட்டுப்பாடின்மையால் குழப்பம், மோதல்கள் ஆகியவற்றைக் கண்டு வருந்தி, இனிமேல் இத்தகைய நிலை ஏற்படா வண்ணம் பார்த்துக் கொள்ளச் சர்க்காரைக் கேட்டுக் கொண்டது.

★ மீண்டும் மின்வெட்டுக் கொடுமைக்கு மக்களை ஆளாக்கும் திறமையற்ற மின்சார இலாகாவைச் சீர்திருத்தி, அவசியம் ஏற்பட்டால் சம்பந்தப்பட்ட அமைச்சரையே மாற்ற ஒரு தீர்மானம் வலியுறுத்தியது.

★ விலைவாசி உயர்வினால் திண்டாடும் நடுத்தர மக்களுக்கு நிவாரணம் தரும் வகையில் ஆண்டுக்கு ரூபாய் பத்தாயிரம் சம்பாதிப்பவர்களுக்கு வருமான வரி விதிக்கும்படியும், அதற்குக் குறைவாகச் சம்பாதிப்பவர்களுக்கு வரி விலக்களிக்கும்படியும் மத்திய சர்க்காரை ஒரு தீர்மானம் கேட்டுக் கொண்டது.

★ அரிசி மொத்த வர்த்தகத்தை அரசு ஏற்கக் கூடாது; அப்படி ஏற்றுக் கொண்டால் மீண்டும் ரேஷன் போன்ற கொடுமைகளுக்கு மக்கள் ஆளாக நேரும்; சரியான முறையில் விநியோகம் செய்யும் திறமை சர்க்காருக்குக் கிடையாது என்று ஒரு தீர்மானம் கூறுகிறது.

★ மக்களைச் சிக்கனமாக இருக்கச் சொல்லும் மந்திரிகளும், சர்க்கார்களும் முதலில் சிக்கனத்தைக் கடைப்பிடித்துக் காட்டி, செலவைக் குறைக்குமாறு ஒரு தீர்மானம் கேட்டுக் கொண்டது.

★ சுதந்திரக் கட்சி ஆரம்பிக்கப்பட்ட நாள் முதல் இன்று வரையில் கட்சி வளர்ச்சிக்காக அயராது உழைத்து வரும் முன்னணித் தலைவர்களில் ஒருவரும், அமரர் ராஜாஜி அவர்களின் அன்புக்கும், மதிப்புக்கும் பாத்திரமானவரும், தமிழ்நாடு சுதந்திரக் கட்சியின் தலைவருமான திரு ஜி. கே. சுந்தரம் அவர்களின் அறுபதாம் ஆண்டு விழாவைச் சீரோடும் சிறப்போடும் கொண்டாட ஒரு மணி விழாக் குழுவை நியமிக்கப் பொதுக் குழு தீர்மானித்தது.

★ திரு தயாபாய் பட்டேல், திரு கோபாலசுவாமி, திரு ச. எஸ். சத்குணம் ஆகியோரின் மறைவுக்கு இரங்கல் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.



# ஞானக்குயில்

ஜெகசிற்பியன்

## 25. கல், சிலையாகிறது!

"வாங்க சார், தோத்திரம்!. உங்க தங்கை என்ன பண்ணுறாள்? இப்போ சந்தோஷமாயிருக்கிறாள். இல்லையா?''

நரசுவுக்கு ஒரே ஆச்சரியமாகிவிட்டது. காலையிலிருந்து சற்று முன்வரையில் ஒரு நாலைந்து தரம் சுகந்தியை அவன் பார்த்தபோதெல்லாம், 'இவளுக்குச் சிரிக்கவே தெரியாதா? இவளுடைய முகத்தில் புன்னகை அரும்பியதே இல்லையா?' என்று எண்ணும் அளவுக்கு ஒரு நிரந்தரமான சோகமே குடிகொண்டிருந்த அவள் முகம் இப்போது திருமலையைப் பார்த்ததும் அந்திக் கருக்கலில் அலரும் ரோஜா மலரென அத்தனை அழகாக, மகிழ்ச்சிக் குதூகலத்துடன் மலர்ந்ததைக் கண்டே அப்படி ஆச்சரியப்பட்டுப் போனான். அத்துடன் அவனை அவள் வரவேற்ற விதமும், அவனுடைய தங்கையைப் பற்றிக் குசலம் விசாரித்த பாங்கும் அவனுக்கு மிக விநோதமாயிருந்தன.

இன்று காலை தான் இல்லாத சமயம் தன்னைப் பார்ப்பதற்காக இங்கு வந்த திருமலை சற்றும் எதிர்பாராத விதமாய்த் தன் தங்கை இவ்விட்டிலே இருக்கக் கண்டு அவளை அழைத்துப் போன நிகழ்ச்சிகளையெல்லாம் இந்தச் சுகந்தியும் உடன் இருந்து கவனித்துக் கொண்டிருந்தாலேயே இப்போது அவனைக் கண்டதும் இவ்வளவு சகஜமாகப் பேசிக் குசலம் விசாரிக்கிறாள் என்பதை அவன் புரிந்து கொண்டானாயினும், சட்டென்று எழுந்து போய்த் திருமலையை வரவேற்கத் தோன்றாமல் அவ்விருவரையும் உள்ளிருந்தவாறே மாறி மாறிப் பார்த்துக் கொண்டு விக்கித்து உட்கார்ந்திருந்தான்.

அவன் இவ்வறையில் இருப்பது திருமலைக்குத் தெரியாததாலோ என்னவோ, வராந்தாவின் படிக்கட்டிலேயே தயங்கி நின்று கூச்சப் புன்னகையுடன் தலை குனிந்தவாறு, '' என் தங்கைதானே?.... இருக்கிறாள்.....'' என்று இழுத்தாற்போல் சொல்லிவிட்டு, '' நரசு இருக்கிறானா? அவனைப் பார்க்கிறதற்காக வந்தேன்'' என்றான்.

சன்னல் வழியாகத் திருமலையைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த நரசுவுக்கு இதுவும் பேராச்சரியத்தை



உண்டுபண்ணியது. ஆமாம்; திருமலை எப்போதுமே இப்படி யாரிடமும் நெளிந்து குழைந்து கூச்சப்பட்டுப் பேசியதை அவன் கண்டதே யில்லை. அதிலும் பெண்களிடம் — அவர்கள் இளம் பருவப் பெண்களாயிருந்தாலும் சரி, வயசானவர்களாயிருந்தாலும் சரி— ஒருவித முரட்டுத்தனமாகவும் அலட்சியமாகவுமே நடந்து கொள்வான். இது பற்றி அவனுக்கும் இவனுக்கும் பல முறைகள் காரசாரமான வாக்குவாதம் நடந்திருக்கிறது. கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது ஒரு தடவை சக மாணவியொருத்தி, 'இதோ போகிருரே, மிஸ்டர் ஆணியழகர்!' என்று அவனுடைய ஆணி விழுந்த காலைக் கேலி செய்யும் விதமாகத் தன் தோழியிடம் சொன்னதைக் கேட்டு அவளது கன்னத்தில் ஓங்கி அறைந்துவிட்டுப் பிறகு அது பெரிய விவகாரமாகிப் பிரின்ஸிபால் வரையில் போய்க் கடைசியில் அந்தப் பெண்ணே அவனிடம் மன்னிப்புக் கோரிய ரசக்கேடான நிகழ்ச்சியும் நடந்திருக்கிறது. அப்படிப்பட்ட பேர்வழி இப்போது இந்தச் சுகந்தியைக் கண்டு இவ்வளவு வெட்கக் குழைவு காட்டுவதும், மரியாதையுடன் நெளிந்து ஒதுங்கி அவனிடம் பேசுவதும் ஆச்சரியப்பட வேண்டிய விஷயம் தானே? ஒருகால் பெரிய மனிதர் ஒருவரின் வீட்டுக்கு வந்திருப்பதால் இத்தகைய தணிவும் பணிவும் காட்டி நடந்து கொள்கிருனே ?

''என்ன கேட்டீங்க சார்?... நரசுவா? அப்படி யாரும் இங்கே இல்லையே !'' என்று நிஜமாகவே அந்தப் பெயரில் யாரும் இல்லை எனத் தீர்மானித்தவள் போல் புருவங்களை மேலே உயர்த்திய படி சற்றே வியப்பும் அநுதாபமும் கலந்த குரலில் கூறினுள் சுகந்தி.

நரசுவுக்குத் தூக்கிவாரிப் போட்டது போல் ஆயிற்று. 'என்ன, இந்தப் பெண் இப்படிச் சொல்கிருளே!' என்று குழம்பினுன் அவன்.

''இல்லையா?.... வெளியே போய் இருப்பான்....! சரி; நான் அப்புறமா



வந்து பார்க்கிறேன்'' என்று அசட்டுச் சிரிப்புடன் சொன்னவாறு அங்கிருந்து செல்லத் திரும்பினான் திருமலை.

துள்ளியெழுந்து அவசரமாக வெளியே வந்த நரசு, ''ஹலோ, திருமலை !'' என்றான் சிரித்துக் கொண்டே.

திடுக்குற்றுப் போன திருமலை அந்தப் பெண்ணையும் நரசுவையும் திருதிருவென்று பார்த்து விழித்தான்.

இதைக் கண்டு சுகந்தியும் அதிர்ச்சி அடைந்தவளாய் நரசுவை நோக்கி, ''உங்களையா அவர் கேட்டார்?'' என்றாள் உள்ளார்ந்த திகிலுடன்.

''உங்கள் பேர் நரசிம்மன்னு மத்தியானம் அம்மா என்கிட்டச் சொன்னாங்களே !''

நரசிம்மன் என்பதும், நரசு என்பதும் வெவ்வேறு பெயர்கள் என்று எண்ணியே அவள் அப்படிச் சொல்லி விட்டாள் என்பதை உடனே புரிந்து கொண்ட நரசுவும் திருமலையும் ஒருவரையொருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டனர்.

''என் பேர் நரசிம்மன்தான். அதை நரசுன்னு சுருக்கியும் கூப்பிடுவாங்க'' என்று ஒரு சின்னப் பிள்ளைக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பது போல் பரிவுடன் அவளுக்கு விளக்கினான் நரசு.

''ஓ !'' என்று மிகவும் கவனமாகக் கேட்டுக் கொண்ட சுகந்தி முகத்தில் வருத்தம் படரத் திருமலையை நோக்கி, ''அவசரப்பட்டுத் தெரியாமல் சொல்லி விட்டேன்; என்னை மன்னிச்சுடுங்க, சார் !'' என்றாள்.

''பரவாயில்லை, பரவாயில்லை !'' என்று உடம்பை நெளித்துக் குழைந்தான் திருமலை. அவள் அங்கிருந்து உள்ளே போய் விட்டாள்.

''வா, திருமலை ! இப்போ உன்னைப் பார்க்க, உன் வீட்டுக்கு வரணும்னு தான் புறப்பட்டுக்கிட்டிருந்தேன் ; — நல்ல வேளை, நீயே வந்துட்டே!''

''சரிதான் பிரதர்! இந்த 'ரெடிமேட்' பேச்செல்லாம் என்கிட்டே வேணும் !'' என்று தன் வழக்கமான குறும்புச் சிரிப்புடன் அவன் முதுகைத் தட்டினான் திருமலை.

''ஏன் காலையில்கூட உன் வீட்டுக்கு நான் வந்தேனே ?''

''ஆமாம்; அம்மா சொன்னாங்க ! அதனால்தான்....''

நரசு குறுக்கிட்டு, ''உன் தங்கை இடைச்சுட்டாளாமே! உன்னோட வீட்டிலிருந்து திரும்பி வந்ததும் இங்கே இருக்கிறவங்க சொல்லிக் கேள்விப்பட்டேன். கேட்கிறதுக்கே ரொம்பவும் அதிசயமா யிருந்தது'' என்று தன்னை மீறிய மகிழ்ச்சியுடன் கூறினான்.

''அதற்காக உனக்கு நன்றி சொல்லணும்னுதான் இப்போ இரண்டாவது தடவையா உன்னைப் பார்க்க வந்தேன் நரசு !''

சற்றே திகைப்படைந்த நரசு, ''நன்றியா?.... எனக்கா?'' என்று ஒரு கணம் தயங்கிவிட்டு, ''சரி; வா, உள்ளே உட்கார்ந்து பேசுவோம்'' என்றவாறு திருமலையின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு தன் அறைக்குப் போனான்.

சற்று முன்னால் அவனுக்காகச் சுகந்தி கொண்டு வந்து கொடுத்த காப்பி, நுரையெல்லாம் அடங்கி ஆறிப் போய் மேலே கிழவியின் சுருங்கிய சருமம் போல் ஆடையும் தட்டி விட்டிருந்தது. ஆனாலும் திருமலை அதை ஆவலுடன் பார்த்து, ''இது காப்பிதானே ?'' என்று கேட்டுக் கொண்டே எடுத்து 'மடக் மடக்'



கென்று குடித்துவிட்டுக் கோப்பையை வைத்தான்.

அவன் எவ்வளவு பசியோடும் களைப் போடும் இருந்தால் இப்படிச் செய் வான் என்று எண்ணிப் பார்த்த நரசு வின் மனம் நெக்குவிட்டு நெகிழ்ந்து போயிற்று. ஆனாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், அறைக் கதவை ஒருக்களித்துச் சாத்திவிட்டு வந்து உட்கார்ந்து, அவனுடைய தங்கை பற்றிய விவரங்களை முதலில் சொல்லு மாறு மிகுந்த ஆவலுடன் வினவினான்.

கண்ணம்மா சென்னைக்கு வந்து இரண்டு நாட்கள் பட்ட அவஸ்தை களையும், பிறகு மூன்றாம் நாள் அந்தக் கன்னிகா மடத்துத் தோட்டக்காரனின் உதவியால் இவ்வீட்டுக்கு வந்து சேர்ந்த விந்தையையும் விவரமாகச் சொல்லி முடித்தான் திருமலை.

அதையெல்லாம் கேட்டு நெஞ்சம் பதறிப் போன நரசுவுக்குத் திடீ ரென்று ஒரு சந்தேகம் எழுந்தது: 'இன்று காலை சுகந்தியை அழைத்துக் கொண்டு ஒரு கிழவன் மட்டும்தானே வந்தான்? அவர்களோடு கண்ணம்மா வந்ததை நான் பார்க்கவில்லையே! ஒருகால் என்னைப் பார்த்துவிட்டு அவள் எங்கேனும் ஒளிந்து கொண்டு நின்று, நான் வெளியே போனபின் உள்ளே வந்திருப்பாளோ?'

இப்படித்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான் நரசு. தன்னைப் பற்றி அவள் ஏதேனும் சொல்லியிருப்பாளா என்பதை அறிய வெகு பூடகமாக ஒரு கேள்வியைக் கேட்டான்: ''அது சரி, திருமலை! உன் தங்கை மாயவரத்திலிருந்து மெட்ரா சுக்கு ரயிலில்தானே வந்தாள்?''

''ஆமாம், நரசு! அதுவும் ஒரு பெரிய அதிசயம்தான். டிக்கட் இல் லாமல் ரயிலில் ஏறிவிட்ட அவளுக்கு யாரோ ஒரு பரோபகாரி தன் டிக்கெட் டைக் கொடுத்துவிட்டுக் கடலூர் ஸ்டேஷனில் இறங்கி விட்டானாம்.''

ஒரு போலியான ஆச்சரியத்துடன் இதைக் கேட்டுக் கொண்டான் நரசு. தன்னைப் பற்றி அவள் தன் தாயிடமோ அண்ணனிடமோ ஒன்றும் சொல்ல வில்லை என்பது இதிலிருந்து அவனுக்குத் தெளிவாயிற்று. அதனால் குழம்பிய மனமும் ஓரளவு நிம்மதி பெற்றது. ''பின்னே எனக்கு எதற்கு நன்றி செலுத்த வந்தாயாம்?'' என்று கேலிக் குரலில் கேட்டான் அவன்.

''நீ மட்டும் இந்த வீட்டில் வந்து தங்கலேன்னா, இவ்வீட்டுக்காரரோட பெண் என் தங்கையைப் பிடிச்சு நிறுத்தி வைச்சிருப்பாளா? அப்படி நிறுத்தி வைக்காமல் ஏதோ பசிக்குக் கொஞ்சம் பலகாரம் கொடுத்து அவளை வெளியே விரட்டி விட்டிருந்தால்...? ஆக, என் தங்கை எங்களோடு வந்து சேர்ந்த தற்கு நீதான் மூல காரணம். உனக்குத் தான் நாங்கள் முதல் நன்றி செலுத்த வேணும்.''

நரசு இதைக் கேட்டு வாய்விட்டுச் சிரித்தான். ''எனக்கு நன்றி சொல்ற துக்காக ரொம்பச் சிரமப்பட்டுக் கார ணங்கள் கண்டுபிடிச்சுக்கிட்டு வந்திருக் கிறே திருமலை!'' என்று கண் சிமிட்டிக் கூறி மீண்டும் நகைத்த அவன், ''அது போகட்டும். நீ வேலைக்கு மனுப் போட் டிருந்த அந்தப் பைப் பாரத் என்கிற கம்பெனியில் நடந்த வேலைநிறுத்தம் முடிஞ்சு போச்சாமே?'' என்று வேறு திசையில் பேச்சைத் திருப்பினான்.

''கேள்விப்பட்டேன்!'' என்றான் திருமலை வெறுப்பும் சலிப்புமாக.

''நாளையிலிருந்து கம்பெனி திறக்கப் படப் போறதாம்.''

''ஆமாமாம்.''

''தொழிலாளர்களின் கோரிக்கைகள் எல்லாமே ஏற்றுக் கொள்ளப்பட்டு விட் டனவாம். டிஸ்மிஸ் ஆன அந்த அசிஸ் டெண்ட்கூட மறுபடியும் வேலையில் நிய மனமாகி விட்டானாம்'' என்று சொல்



லிக்கொண்டே திருமலையின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான் நரசு.

''இதையும் கேள்விப்பட்டேன். இப்போ அங்கேயிருந்துதான் வரேன்'' என்று அலட்சியமாகப் பதிலிறுத்த திருமலை இன்னும் ஏதோ சொல்ல வாயெடுத்துப் பின் சுற்று முற்றும் பார்த்துவிட்டு மௌனமானான்.

''சரி; அடுத்து எங்கே படையெடுக்கிறதாக உத்தேசம்?'' என்று மீண்டும் அவன் வாயைக் கிண்டினான் நரசு.

''நானா?... இனி நான் எங்கேயும் வேலை தேடுவதாக உத்தேசம் இல்லை.''

''பெட்டிக் கடைகளில் கணக்கு எழுதுகிற உத்தியோகமே போதும்னு தீர்மானிச்சுட்டியா?''

''எனது தீர்மானத்தைச் சொன்னால் நீ அப்படியே அலறி மயக்கம் போட்டுக் கீழே விழுந்துடுவே பிரதர்!'' என்று கூறியவாறு எழுந்தான் திருமலை.

''எங்கே, இதற்குள் எழுந்துட்டே?''

''இப்போ மணி அஞ்சு இருக்கும் இல்லையா? என் தங்கையைத் தேடி அலைஞ்சுகிட்டு இருந்ததாலே கடந்த மூணு நாட்களாகப் பெட்டிக் கடைக் கணக்கு எழுதற வேலைக்குப் போக முடியலை. இன்னிக்கும் போகலேன்னா அவ்வளவுதான், ரெண்டோடு சேர்ந்து மூணாவது வயிறும் லங்கணம் கிடக்க வேண்டியதாகி விடும்'' என்று கூறிச் சிரித்தான் திருமலை.

''ஆமாம்; என்னமோ நீ செய்திருக்கிற தீர்மானத்தைச் சொன்னால் நான் மயக்கம் போட்டு விழுந்து விடுவேன்னு சொன்னயே, அதைச் சொல்லி என்னை மயக்கம் போட வைச்சுட்டுத்தான் போயேன்!'' என்று நையாண்டியாகக் கேட்டுக்கொண்டே நரசுவும் எழுந்தான்.

''சொல்றேன். ஆனால் இன்னிக்கு வேணாம்; இன்னொரு நாளில்.''

''இப்போ என்ன, ராகு காலமா? எமகண்டமா?'' — கலகலவென்று சிரித்தான் நரசு. ''அது இருக்கட்டும். உன் வீட்டு மாடியிலே யாரோ வங்காளி போல் ஒருத்தர் குடியிருக்கிறாரே, அவர் யார்?''

இதைக் கேட்டு அதிர்ச்சியடைந்தவன் போல் முகம் வெளிறிச் சிறுத்துப் போன திருமலை, ''ஓ...அவரா?... ஆமாம்; அவர் வங்காளிதான்!... நான் வரட்டுமா? நேரம் கிடைக்கும்போது வந்து சொல்றேன்'' என்று ஒருவிதத் திணறலுடன் குழறிக் கொண்டே அறையை விட்டு வெளியே நடந்தான்.

### மஹாருத்ர யக்ஞம்

சென்னைக்கு அருகிலுள்ள நங்கைநல்லூர் குளக்கரையில் அண்மைக் காலத்தில் ஸ்ரீ அர்த்த நாரீசுவரருக்கு ஓர் ஆலயம் அமைந்து ஸ்ரீபால கணபதி, ஸ்ரீபால ஸுப்ர மண்ய ஸ்வாமி ஸந்நிதிகளும் அமைக்கப் பட்டுக் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இங்கு பொதுமக்கள் நன்மையைக் கருதி, 121 ருத்விக்குகளுடன் ஜபஹோம பூர்வமாக மஹா ருத்ர யக்ஞம் 7-10-73 அன்று நடத்த ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகளின் அனுக்கிரகத்துடன் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கோவில் திருப்பணிகளுக்கு நிதி சேர்க்கு முகமாகவும் ஏற்படுத்தப்பட்ட இந்த வைபவத்திற்கும் பக்தர்கள் தங்கள் தாராளமான பொருளுதவியை, பொருளாளர், ஸ்ரீராம்பு பிரசாத், நி. 5, 2வது தெரு, நங்கைநல்லூர், சென்னை-61 என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறோம்.

அவனுடைய இந்தத் திக்குமுக்காட்டத்தைக் கண்டு உள்ளூற வியப்பும் குழப்பமும் அடைந்த நரசு அவனைப் பின்தொடர்ந்து வராந்தாவுக்கு வந்தான்.

படிகளில் இறங்கிக் கொண்டே யாரையோ தேடுவது போல் அங்குமிங்கும் பார்த்த திருமலை, ஏதோ ஓர் ஏமாற்ற உணர்ச்சி முகத்தில் நிலவ, நரசுவிடம் விடைபெற்றுக் கொண்டு வெளியேறினான்.

நரசு திரும்பி வந்து தன் அறையில் அமர்ந்தான். கொஞ்ச நேரம் வரையில் அவனால் எதைப் பற்றியுமே சிந்திக்க முடியவில்லை. தன் முகத்துக்கு எதிரே மத்தாப்பூ வாணம் ஒன்று வட்டமாய் ஒளி சிதறிச் சுழல்வது போன்ற பிரமை ஏற்பட்டது.

அவனை அறியாமலே அவனுடைய பார்வை அந்த உள் சுதனின் இடுக்கை நோக்கிச் சென்றது. அங்கே சற்று முன்னால் அவன் செருகி வைத்திருந்த கடிதத்தைக் காணோம்!

'இதற்குள் அதை யார் எடுத்துச் சென்றிருப்பார்கள்? ஒருகால் நான் அவசரத்தில் செருகியபோது மறு பக்கத்தில் அது நழுவிக் கீழே விழுந்து விட்டிருக்குமோ!' அவன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

'புஷ்ப சுகந்தி என்ற இந்தப் பெண் பாக்கியத்தம்மாளின் மகளா? இத்தனை காலமாக இவ்வளவு பெரிய உண்மை எனக்கும் என் அம்மாவுக்கும் தெரியாமல் மறைத்து வைக்கப்பட்டது ஏன்?...'

உடனே அவனுடைய சிந்தனை வேறொரு கேள்விக்குத் தாவியது:

'சுகந்தி பாக்கியத்தம்மாளின் மகள் என்றால் அவளின் தந்தை யார்? 'பாக்கியத்தம்மாள் திருமணம் ஆனவளா? அல்லது திருமணம் ஆகாமலே இந்தப் பெண் பிள்ளைக்குத் தாயானவளா?'

சற்று முன் தான் படித்த அந்தக் கடிதத்தின் வாசகங்களை இப்போது அவசரம் அவசரமாக நினைவுக்குக் கொண்டு வந்த அவன், ஏதோ ஒன்றைப் புரிந்து கொண்ட மாதிரி வியப்புடன் புருவங்களை மேல் உயர்த்தினான்: 'ஓ!...இப்படியும் இருக்கலாமோ? அதாவது சுகந்தியின் தந்தை... இந்தப் பெரிய மனிதர் வேதமூர்த்திதானோ?'

சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான் நரசு. அவனுடைய கற்பனைப் புரவி இப்போது வெகு வேகமாய்ப் பறக்கத் தொடங்கியது:

'ஆமாம்; சுகந்தியின் இப்போதைய வயதை வைத்துப் பார்த்தால் ஒரு பதினெட்டு வருடங்களுக்கு முன் — பாக்கியத்தம்மாள் இவருடைய இந்த வீட்டில் செவிலித் தாயாய் வேலை பார்த்த சமயம் — இது நடந்திருக்கிறது என்பது தெளிவாகிறது. அதாவது, இந்த வேதமூர்த்தி வாலிப வயதில், தம் வீட்டிலே வேலைக்காரியாய் இருந்த பாக்கியத்தம்மாளிடம் காதல் கொண்டிருக்கிறார்; அதன் காரணமாய் அவள் ஒரு குழந்தைக்குத் தாயாகியிருக்கிறாள்; தமது குடும்பத்தாரின் எதிர்ப்புக்கு அஞ்சி அவளை மனைவியாக ஏற்க மறுத்திருக்கிறார்; ஆனாலும் அவளுடைய குழந்தையை ஏதோ ஒரு கன்னிகா மடத்தில் கொண்டு போய்ச் சேர்த்து விடும்படி நயமாகவும் பயமுறுத்தியும் யோசனை கூறி, அதன் பிற்கால வாழ்க்கைக்குத் தாம் உத்தரவாதமாய் இருப்பதாகவும் வாக்குறுதி அளித்திருக்கிறார்; பிறகு தம் நெருங்கிய நண்பராயிருந்த என் தந்தையிடம் விஷயத்தை வெளியிட்டுக் கெஞ்சிக் கூத்தாடி அவளை எங்கள் வீட்டில் வேலைக்காரியாக வைத்துக்கொள்ளுமாறு வேண்டியிருக்கிறார்; என் தந்தையும் அவ்வேண்டுகோளை மறுக்க முடியாமல் ஏற்றிருக்கிறார்...'

ஒரு பெரிய மர்மத்தை இவ்வளவு விரைவாகவும் சரியாகவும் ஊகித்துப் புரிந்து கொண்டு விட்டோமே என்று தன்னையே மெச்சிக் கொள்கிறவன் போல் தொடையில் ஓங்கி ஒரு தட்டுத் தட்டிக் கொண்டு தலையையும் பலமாக ஆட்டிக் கொண்டான் நரசு. இந்த முடிவை உறுதிப்படுத்திக் கொள்ள இன்னொர் ஊகமும் அவனுக்கு மின்னலெனத் தோன்றியது:

'ஓ... சரிதான். வேதமூர்த்தி தம் இரகசியக் காதலால் ஒரு குழந்தைக்குத் தந்தையான விஷயத்தையும், அந்தக் குழந்தை கிறித்துவக் கன்னிகா மடம் ஒன்றில் அநாதையாக வளர்ந்து வருகிறது என்கிற விவரத்தையும் இத்தனை காலம் உலகத்துக்குத் தெரியாமல் மூடி மறைத்து வைத்திருந்தது போலத் தம் மனைவிக்கும் தெரியப்படுத்தாமல் இருந்திருக்கிறார். அந்நிலையில் பாக்கியத்தம்மாள் தனக்குக் கொடுத்த வாக்குறுதியை நினைவுபடுத்தி அதை நிறைவேற்றுமாறு கேட்டுக் கொண்டு வேதமூர்த்திக்கு எழுதிய கடிதம் துரதிர்ஷ்டவசமாகக் கௌரியம்மாளின் கையில் கிடைத்து விட்டிருக்கிறது. அதிலிருந்து தன் கணவரின் துரோகச் செயலையும், தீய நடத்தையையும் அறிந்து கொண்ட அவள் பேரதிர்ச்சிக்கும் பெரும் கோபத்துக்கும் உள்ளாகி இரத்தக் கொதிப்பு ஏற்பட்டு, உயிராபத்தான நிலையை எட்டி விட்டிருக்கிறாள். பிறகு தெய்வாதீனமாய் அந்தக் கண்டத்திலிருந்து தப்பி உடம்பு குணமாகி வந்ததும், அவளை எப்படியோ சமாதானப்படுத்தி அவளது அனுமதியைப் பெற்றுக் கொண்டு போய், கன்னிகா மடத்தில் இந்நாள்வரை அநாதையாய் வளர்ந்து கொண்டிருந்த தம் 'மூத்த' மகளை— அவளின் தாய்க்குக் கொடுத்த வாக்குறுதியின்படி — இன்று தமது வீட்டுக்கே அழைத்து வந்து விட்டிருக்கிறார். இவ்வாறு செய்யத் தவறினால் தம் கணவரின் மானம் பறி போகும்படியான காரியங்களில் பாக்கியத்தம்மாள் துணிந்து இறங்கி விடுவாளோ என்று பயந்துதான் கௌரியம்மாளும் அதற்கு உடன்பட்டு ஒப்புதல் தந்திருக்கிறாள். இப்படியெல்லாம் உள் வயணங்கள் இருந்தமையால்தான், என்னிடம் இவ்விருவருமே பாக்கியத்தம்மாளைப் பற்றி இதுவரையில் ஒரு வார்த்தையும் விசாரிக்காமல் இருக்கிறார்கள் போலும்! பாக்கியத்தம்மாளும் நான் இந்த வேதமூர்த்தியின் வீட்டில் வந்து தங்கப் போகிறேன் என்பதை அறிந்தபோது அதுபற்றி ஒன்றுமே சொல்லாமல் மௌனம் சாதித்ததற்கு இதுதான் காரணம் போலும்.'

நரசுவின் சிந்தனை சட்டென்று வேறொரு திசையில் திரும்பியது.

(தொடரும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

## அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!

**பியர்ஸ் சருமக் களை ... கன்னிப் பருவக் களை**




இப்போது அழகான அட்டைப் பெட்டியிலே கிடைக்கிறது
சென்னை நகரிலும், திருவனந்தபுரத்திலும், கோழிக்கோட்டிலும் மட்டுமே.

லின்டாஸ்-PS. 24 CP - 140 TM.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

Registered No. M. 4392

Registered as a Newspaper in Sri Lanka இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)